# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI 5.8.2007 ரூ.8.00 96 பக்கங்கள்










அதிக பக்கங்கள்!

ஆரம்பம்:

ஆச்சர்யம்
ஜகஜ்ஜால ஜோடி

அனுபவம்
கிளைச்சாலை

அதிர்ச்சி
சி.ஐ.டி.விஷ்வா

பரவசம்
குருக்ஷேத்ரம்

# விஷம மூடில் விஷால்!



**Team Health Shoppe**
*For Wellness*

**சென்னையில், டீம் ஹெல்த் ஷாப்பின் 4வது கிளை திறப்பு - புரசைவாக்கத்தில்**

# ஆலோ வேரா அருந்துங்க ஜோரா

## ஆலோ வேரா ஜூஸ்...

நம் உடலின் நோய் எதிர்ப்பு சக்திக்கு தேவையான இன்றியமையாத அமினோ ஆசிட், விட்டமின், மினரல் மற்றும் என்சைம் ஆகியவற்றை கொண்ட ஆலோ வீரா தற்போது இயற்கையான ஜூஸ் வடிவில்...

- Cold press மூலம் பதப்படுத்தப்பட்டது.
- தரமான, சுத்தமான இலைகளிலிருந்து தயாரிக்கப்பட்டது.
- தேவையான சத்து பொருட்களை காக்க 100% stabilize செய்யப்பட்டது.

**ஸ்பெஷல் ஆஃபர்***
அனைத்து ஆலோவீரா தயாரிப்புகளுக்கும் 5 முதல் 10% தள்ளுபடி. இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே

*நிபந்தனைக்குட்பட்டது

## டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்

• டீம் சோடியம் அல்லாத உப்பு • டீம் அரை உப்பு • டீம் நல்லெண்ணெய் • டீம் தேங்காய் எண்ணெய் • கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள் • தேன் வகைகள் • டீம் எனர்ஜி வாட்டர் • பனைப்பொருட்கள் • மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள் • கொடைக்கானல் மலை தைலம்







**TEAM EUBIO CARE**
(Division of CAL)

வண்டலூர்: - போன்: 2275 0502
இந்திரா நகர்: - போன்: 4269 5115
அண்ணாநகர்: - போன்: 4269 3332
புரசைவாக்கம்: 23B, கீழ்தளம், பிரின்ஸ் டவர், (அபிராமி மால் எதிரில்), புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10. போன்: 4542 8898

For bulk requirements, Contact :
Team House - GST Road, Vandalur, Ch - 48
Fax : 22750860 (or)
E-mail: teamhealthshoppe@drraoholdings.com

www.teamhealthshoppe.com




OPEN ON ALL DAYS

வளையல் திருவிழா!



# நட்சத்திரக் கூட்டம்போல் வளையல்கள்...
# எழில்வானச் சித்திரம்போல் டிசைன்கள்!

எண்ணிக்கையில் அடங்காத எண்ணற்ற வளையல்களின் எழில்மிகு அணிவகுப்பு.
இன்றே வாருங்கள்... எண்ணம்போல் வாங்கி மகிழுங்கள்

நகைகள் வாங்கும் அனைவருக்கும்
சிறப்புச் சலுகை

பழைய நகைகள் அனைத்தையும்
மாற்றிக்கொள்ள
சிறப்பு எக்ஸ்சேஞ் மேளா

From the Group of The Chennai Silks Jewellery Mahal



ஸ்ரீ குமரன் தங்கமாளிகை™

தமிழகத்தின் தன்னிகரற்ற தங்கமாளிகை

கோவை : 2399888 | திருப்பூர் : 2247754 | ஈரோடு : 2213277 | திருச்சி : 2717888

ஞாயிறு கடை உண்டு + Shop online at www.ktmjewellery.com + கார் பார்க்கிங் வசதி உண்டு

உலக அதிசய தேர்ந்தெடுப்பு வைபவத்திலும் இவ்வளவு வசூல் விவகாரங்களா! இது ஒருபுறம் இருந்தாலும் ஆக்ராவையும், தாஜ்மகாலையும் நாம் சரிவர பராமரிக்கிறோமா என்கிற டூரிஸ்ட்



# மில்லியன் டாலர் உண்மை!

கைடின் கேள்வி மில்லியன் டாலர் உண்மை!

**உறையூர், சொ.சுப்பராமன்**

தந்தை ராமதாஸ் ஆங்கிலத்துக்கு எதிராகக் கொடி பிடிக்கிறார். மகன் அன்புமணியோ டாக்டர், சிசேரியன், கேபிடேஷன் ஃபீஸ், கட்-அவுட் மெஜாரிட்டி என்று ஆங்கில வார்த்தைகளை அள்ளி விடுகிறார். உபதேசம் என்பது ஊருக்கு மட்டும்தானா?

**பசக்காளிபாளையம், ராமலட்சுமணன்**

தொழில் தொடங்கலாம், வாங்க! கட்டுரையில், எந்த இடங்களில் தொழில் தொடங்கலாம் என்று கூறி, தொழில் துவங்க நினைப்பவர்களுக்கு வழிகாட்டி விட்டீர்கள்!

**நாகர்கோவில், ஏ.பி.எஸ்.ரவீந்திரன்**

'நேற்று பியூன் இன்று முதலாளி' கட்டுரை இன்றைய உழைக்கும் இளைஞர்களுக்கு நம்பிக்கையூட்டுகிறது.

**வேளச்சேரி, ஜி.லக்ஷ்மி வாசுதேவன்**

"ரோல் மாடல் ரோஜர் ஃபெடரர்" கொடுத்துள்ள குறிப்புகள் சாதிக்கத் துடிக்கும் அனைவருக்கும் டானிக்.

**பொள்ளாச்சி, சி.ஆர்.நாகராஜன்**

அ.தி.மு.க. கூட்டணிக்கு, பா.ம.க. தலைவர் ராமதாஸை பாசத்தைப் பொழிந்து ஜெயலலிதா அழைக்கும் கார்ட்டூன் கன கச்சிதம்!

**கோ.புதூர், இரா.சக்கரபாணி**

பிரதிபா - அப்துல்கலாம் ஒப்பீடு, செக்கு - சிவலிங்கத்துக்கு உள்ள தாரதம்மியங்களையும், இமாலய வித்தியா

"அசத்யமேவ ஜயதே" கார்ட்டூன் மூலம், விளங்காத பல விஷயங்களை விளக்கி விட்டீர்கள்!

**திருநெல்வேலி, பொருநை பாலு**

யாரோ யாரோ செல்போன் வைத்திருக்கும் இக்காலத்தில் பில் கேட்ஸுடைய குருவின் தன்னடக்கம் வியக்க வைக்

## வட்டமேஜை

66 ஆண்டு மலர்

சங்களையும் நன்கு உணர்த்தி விட்டது.

**மேற்கு மாம்பலம், ஆர்.கோபாலன்**

**வ**ளம் தரும் கோயிலில் ஊரறிந்த கள்ளரைப் பற்றி படித்த போது, கள்ளரைப் பற்றி யாமறியாத விஷயங்கள் இவ்வளவு உள்ளனவா என்று திகைத்துவிட்டேன்!

**மதுரை, என்.உஷாதேவி**

'**வ**ளம் தரும் கோயில்' கட்டுரையில் சிறு தவறு. 'பச்சைமாமலை போல் மேனி' என்று பாடியது தொண்டரடிப்பொடிஆழ்வார். பெரியாழ்வார் இல்லை.

**ஸ்ரீரங்கம், சுதா நாராயணன்**

**ம**னம்போல் வாழ்வு எதிர்பார்த்து ஏங்கும் திருமாலின் பக்தை ஆண்டாள் பற்றிய சுஜாதாவின் விளக்கத்துக்கு, இனிய கானத்தைக் கேட்டும் கசக்கும் வேம்பாய் கோதை முகம் சுளிப்பதைக் கண்முன் காட்சியாக வழங்கியுள்ளார் ஓவியர் வேதா.

**கு.கமுகாசலபுரம், எஸ்.ஏ.கேசவன்**

## ஸ்வீட் போஸ்ட்

கிறது. புஃப்பெட் கூறும் கருத்துக்கள் அத்தனையும் ரிச்.

**சென்னை, பி.ஹேமாம்புஜம்**

**அ**ப்துல் கலாமுக்குப் பிரிவு உபசார விழா போல அமைந்தது நேர்காணல். பதவி விலகியதும் கலாமை மறந்து விடாமல் அவர் கனவை நனவாக்க முயல்வோம்.

**சென்னை - 78, அ.யாழினி பார்வதம்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications
Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

பார்ப்பதற்குப் பக்கத்து வீட்டுப் பையனைப் போல படுகேஷுவலாக இருக்கிறார் நடிகர் விஷால். செல்லமே படத்தின் மூலம் திரையுலகில் அறிமுகமான இவரின் சக்சஸ்ஃபுல் கிராஃப் சண்டைக்கோழி, சிவப்பதிகாரம், திமிரு, தாமிரபரணி என படுவேகமாக எகிறிக் கொண்டிருக்கிறது. 'மலைக்கோட்டை' படத்தின் கடைசிக்கட்டப் படப்பிடிப்பில் இருந்தவரை உணவு இடைவேளையில் மடக்கினோம்.

# விஷம மூழல்

**எப்படி இருக்கீங்க?**

''ரொம்ப சந்தோஷமா இருக்கேன். நான் எதிர்பார்த்ததெல்லாம் நடந்துக்கிட்டிருக்கு. என்னை ஒரு சக்சஸ்ஃபுல் ஹீரோவா தமிழ் ரசிகர்கள் ஏத்துக்கிட்டாங்க. ரசிகர்களோட அன்பையும் ஆதரவையும் பார்க்கும்போது இன்னும் அதிகமாக உழைக்கத் தோணுது. செய்ற தொழில்ல முழு ஈடுபாடு இருந்தா போதும். ஈஸியா வெற்றிக்கோட்டையை எட்டிப் பிடிச்சிடலாங்கிறதுக்கு நானே உதாரணம்.''

**அதென்ன மலைக்கோட்டை... ஆக்ஷன் படமா?**

''இது திருச்சியில நடக்கிற கதை. அதான் பேரு மலைக்கோட்டைனு வெச்சிருக்கோம். சில நிர்ப்பந்தங்களால சொந்த ஊரவிட்டு திருச்சிக்கு வர்ற ஹீரோ, நாற்பது நாள் திருச்சியில தங்க வேண்டியிருக்கு. அங்க அவர் எதேச்சையா சந்திக்கிற ஹீரோயினும், அதனால ஏற்படுற காதலும், வில்லன்களோட மோதலும்னு கதை ரணகளமா நகருது. செப்டெம்பர் மாசம் படம் தியேட்டருக்கு வந்துரும்; மீதிய அங்க பாத்துக்கங்க.''

**ஏன் தொடர்ந்து ஆக்ஷன் படமாவே நடிக்கிறீங்க?**

''எனக்குச் சொல்லப்படுற கதைகள் அதுமாதிரிதாங்க இருக்கு. அடிப்படையில எனக்கு ஆக்ஷன் படங்கள்னா ரொம்ப இஷ்டம். என்னோட ரசிகர்களும் சரி, என்னை வச்சுப் படம் பண்ணுற தயாரிப்பாளர்களும் சரி, என்கிட்டேயிருந்து ஆக்ஷனைத்தான் எதிர்பாக்குறாங்க. இருந்தாலும்,

நான் ஆக்ஷன் படம்தான் நடிப்பேன்னு அடம் பிடிக்கறவனில்லை. சிலப்பதிகாரம் போல கதையம்சமுள்ள படம்னாலும் சரி, நான் எதுக்கும் ரெடியாத்தான் இருக்கேன்.''

**இயக்குநர் கனவோட சினிமாவுக்கு வந்தீங்க, ஆனா நடிகனாயிட்டீங்க... எப்படி ஃபீல் பண்றீங்க?**

''நான் அர்ஜுன் சார்கிட்டதான் அஸிஸ்டென்டா சேர்ந்தேன். அவர் தான் என் ஆரம்ப நாட்களில் எனக்கு சினிமாவைப் புரிய வைத்தவர். நான் நடிகனாகுறதுக்கான முதல் விதையைக்கூட அவர்தான் தூவினார். என்னை முதன்முதல்ல ஸ்கிரீன் டெஸ்ட் பண்ணினதுகூட அவர்தான். நான் இன்னிக்கு இவ்வளவு வளர்ந்திருக்கேன்னா அதுக்கு அவரும் ஒரு காரணம். மத்தபடி என் இயக்குநர் கனவு அடி மனசுல நீருபூத்த நெருப்பு போல இன்னும் கனன்று கிட்டுத்தான் இருக்கு. சமயம் வரும்போது சாதிப்பேன்.''

**அப்பா ஒரு பிரபல தயாரிப்பாளர் என்பதால், உங்கள் சினிமா எண்ட்ரி ஈஸியாயிடுச்சு இல்லையா?**

''இன்றைய என் நிலைமைக்கு அப்பா தான் காரணம். அவர் இல்லேன்னா நான் இல்ல. அவர் எப்போதும், 'நீ முதல்ல ஹீரோவாகப் பாரு. அப்புறம் டைரக்டர் ஆகலாம்'னு சொல்லிக்கிட்டே இருப்பாரு. அவரோட அந்த அப்ரோச்தான் என்னை உங்க முன்னாடி நிறுத்தியிருக்கு. ஆனா, அவர் எனக்குச் சான்ஸ் கேட்டு யாருக்கும் சிபாரிசு பண்ணினதில்லை. சினிமா துறையில எதுவுமே ஈஸியா கிடைச்சுடாது. எத்தனையோ வலிகளைத் தாங்க வேண்டியிருந்தது. நம்ம கலர் வேற கறுப்பு. இவனுக்கெல்லாம் ஹீரோ ஆசை எதுக்குன்னு என் காதுபடவே கமென்ட் அடிச்சிருக்காங்க. அதையெல்லாம் தாங்கிக்கிட்டுதான் இந்த இடத்துக்கு வந்திருக்கேன். என்னோட வெற்றி அதிர்ஷ்டத்தால வந்தது அல்ல; வியர்வையால் விளைந்தது.''

# விஷால்!

**நீங்க விஜயோட ஸ்டைல ஃபாலோ பண்றதாச் சொல்**



# என்னைப் போலவே விஜயும் ஆரம்ப கால கட்டங்களில் கேலிக்கும் கிண்டலுக்கும் ஆளானவர்தான்!

நாங்களே...

''சினிமாவுல மத்தவங்கள ஃபாலோ பண்ணினா ரொம்ப காலத்துக்குத் தாக்குப்பிடிக்க முடியாது. தனக்குன்னு ஒரு ஸ்டைல உண்டாக்கணும். நான் யாரையும் ஃபாலோ பண்றது கிடையாது. தனி ஸ்டைலை மெயின்டெய்ன் பண்றேன். லயோலா காலேஜ்ல எனக்கு இரண்டு வருஷம் சீனியர் விஜய். அவருடைய ஆரம்பகால சினிமாவிலிருந்து இப்ப வரைக்கும் ஒவ்வொன்றையும் ரசிச்சுப் பார்ப்பேன். என்னைப் போலவே அவரும் ஆரம்பகால கட்டங்கள்ல கேலிக்கும் கிண்டலுக்கும் ஆளானவர்தான். அதையெல்லாம் தாண்டி வளர்ந்திருக்காருன்னா அவரோட தன்னம்பிக்கைதான் காரணம். மத்தபடி விஜயை நான் ஃபாலோ பண்றதோ, அவரோட இடத்தைப் பிடிக்கிறதோ என் லட்சியம் கிடையாது. என்னோட பாதை வேற. என்னோட திட்டங்கள் வேற!''

**சிவாஜி பார்த்தாச்சா?**

''நான் பயங்கர ரஜினி ரசிகன். அவரோட ஒவ்வொரு பட ரிலீசும் நமக்குத் திருவிழாதான். தன்னோட ஸ்டைலால தமிழ்த்திரையுலகை இத்தனை வருஷம் கட்டி ஆண்டுக்கிட்டிருக்கிற ஜீனியஸ் அவர். ஷங்கர் சார பத்திச் சொல்லவே வேண்டாம். அவரோட ஒவ்வொரு படமும் அவரோட இன்னொரு படத்துக்குச் சவாலா இருக்கும். அப்படிப்பட்ட இரண்டு ஜாம்பவான்களும் இணைஞ்சதுல தமிழ்நாடே அதிர்ந்து போயிருக்கு...''

**மலைக்கோட்டை சரி... அப்புறம்?**

''சத்யம்'' பண்றேன். என்னோட சொந்தத் தயாரிப்பு. ராஜசேகர்ங்கிற புதுமுகம் டைரக்டர். சுரேஷ் கிருஷ்ணாகிட்ட அஸிஸ்டென்டா ஒர்க் பண்ணினவர். அடிப்படையில் ஒரு பத்திரிக்கையாளர். இந்தப் படத்துல எங்கூட ஹீரோயினா நயன்தாரா நடிக்கிறாங்க. மத்த ஆர்ட்டிஸ்ட் செலக்ஷன் பேச்சுவார்த்தையில இருக்கு.''

**உங்களுக்கும் ரீமா சென்னுக்கும் காதலாமே?**

''ரெண்டு படத்துல சேர்ந்து நடிச்சா உடனே லவ்வுன்னு சொல்லிடறதா? அவங்க நல்ல நடிகை; நல்ல ஃப்ரெண்ட், அவ்வளவுதான். அதைத் தாண்டி எங்களுக்குள்ள எதுவும் கிடையாது. என்னோட அடுத்தடுத்த படங்கள்ல அவங்க நடிச்சாலும் ஆச்சரியப்படுறதுக்கு ஒண்ணுமில்லை'' என்று சொல்லிவிட்டு விஷமமாகச் சிரிக்கிறார்.



– **கதிர்பாரதி**

அட்டை, படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இந்த வருடமும் எண்ணற்ற எழுத்தாளர்கள் கலந்துகொண்டு, தங்கள் கதைகளைப் பரிசீலனைக்கு அனுப்பியிருந்தனர். இறுதிச் சுற்றில் பத்திரிகையாளர் மணா, கவிஞர் தமிழச்சி ஆகியோர் நடுவர்களாகப் பங்கேற்று, கல்கி ஆசிரியர் சீதா ரவியுடன் இணைந்து கீழ்க்காணும் சிறுகதைகளைப் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுத்தனர்.

முதல் பரிசு ரூ.10,000/-

**துரத்தும் நிழல்** - சோ. சுப்புராஜ்

இரண்டாம் பரிசு ரூ.7,500/-

**அப்பாவுடன் ஒரு நாள்** - வடுவூர் சிவ.முரளி

மூன்றாம் பரிசு ரூ.5,000/-

**புனிதப் பயணம்** - ஏ.ஏ.ஹெச்.கே.கோரி

முதல் பரிசு பெற்ற கதை இந்த இதழில்... பிரசுரத்துக்குத் தேர்வான கதைகளின் பட்டியல் அடுத்த இதழில்...

பரிசு பெற்றவர்களுக்கு வாழ்த்துக்கள்! உற்சாகத்துடன் கலந்துகொண்ட அனைவருக்கும் நன்றி.

(ஆர்.)



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2007 - முடிவுகள்

இதில் நகரமாக மாறிவிட்டது திருப்பூர். திருப்பூர் நகரின் பிச்சம்பாளையம் பகுதியில் ஒரு வீட்டில் தங்கியிருந்த நக்சலைட் தீவிரவாதிகளான சுந்தரமூர்த்தி, ஈஸ்வரன், கார்த்திக் ஆகிய மூவரைக் கைது செய்தது கியூ பிராஞ்ச் போலீஸ். கடந்த பதினைந்து ஆண்டுகளாக, தலைமறைவாக இருந்து வந்த நபர் சுந்தரமூர்த்தி. சமீபத்தில் பெரியகுளம் - முருகமலை வனப்பகுதியில் நக்சலைட்டுகளின் ஆயுதப் பயிற்சி முகாம் முயற்சிகளுக்கு மூளையாகச் செயல்பட்டவர் இந்த சுந்தரமூர்த்தி.



* ஜே.ஆர்.ஜான்



* சண்முக சுந்தரம்

இதனால், திருப்பூர் நகரின் பரவலான குடியிருப்புப் பகுதிகளில் மேலும் பல நக்சலைட்டுகள் ஊடுருவியிருக்கக் கூடுமென சந்தேகிக்கப்படுகிறது.

இந்த நிலையில் நாம் திருப்பூரிலும் சுற்றுப் புறங்களிலும் ஆய்வு செய்தோம்.

" 'வேலைக்கு ஆட்கள் தேவை' என்கிற சின்னஞ்சிறு விளம்பர அட்டைகள், திருப்பூரில் திரும்பும் இடங்களில் எல்லாம் கண்களில் படுகின்றன. இந்த அளவுக்கு இந்தியாவில் வேறு எங்கும் இருக்குமா? என்பது சந்தேகம்தான்'' என்கிறார் பின்னலாடை கொள்முதல் செய்ய வந்திருந்த மும்பைவாசி ஒருவர்.

திருப்பூர் மற்றும் அதனையொட்டி சுமார் இருபத்தைந்து கி.மீ. சுற்றளவுக்குள் இயங்கி வரும் பின்னலாடைத் தொழிலகங்கள்தான் தஞ்சை, நாகை, திருவாரூர், புதுக்கோட்டை, மதுரை, ராமநாதபுரம், கம்பம், தேனி, கடலூர், திருவண்ணாமலை... போன்ற மாவட்டங்களிலிருந்து வேலை தேடி வருபவர்களின் புகலிடங்களாகின்றன. இதனால், அவர்கள் தங்கிக் கொள்வதற்காக திருப்பூர் மற்றும் அதன் சுற்று வட்டாரங்களில் புதியப் புதிய குடியிருப்பு வீடுகள் மேன்மேலும் உருவாகிக் கொண்டிருக்கின்றன.

திருப்பூரிலிருந்து பல்லடம், தாராபுரம்,

# நக்சல் நகரமாகும்




காங்கேயம், ஊத்துக்குளி, பெருமா நல்லூர், போன்ற முக்கிய ஊர்களுக்குப் பிரியும் சாலைகளையெல்லாம் குடியிருப்புகள் எழுந்துள்ளன. பத்துக்குப் பத்து சைஸில் கட்டி விடப்பட்டிருக்கும் சின்னஞ்சிறு வீடுகளில் தொழிலாளர்கள் வசித்து வருகின்றனர். வரிசை வரிசையாக அடுக்கி வைத்தாற் போலிருக்கும் இந்தப் புறாக்கூண்டு வீடுகள்தான் சமூக விரோதிகளுக்கும், நக்சலைட்டுகளுக்கும் தற்காலிகப் பதுங்குமிடங்களாக மாறிப் போயுள்ளன.

''பின்னலாடை உற்பத்தியில் நேரடியாகவும் மறைமுகமாகவும் சுமார் ஆறரை லட்சம் பேர் வேலை பார்த்து வருகின்றனர். இது திருப்பூர் மக்கள் தொகையில் எழுபது சதவிகிதம் ஆகும். திருப்பூர் நகர வளர்ச்சிக்கு இந்தப் பின்னலாடைத் தொழில் முக்கிய காரணம்.

திருப்பூர் நகரில் நக்சலைட்டுகள் பதுங்கல் என்கிற அச்சத்தின் காரணமாக, பின்னலாடைத் தொழில் பாதிப்புகள் நேரடியாகவே தெரிகின்றன. மேலும் பல நக்சலைட்டுகள் புறநகர்ப் பகுதிகளில் தங்கியிருக்கக் கூடுமென காவல் துறையினரால் தேடப்படுகிறார்கள். தங்களின் பதுங்குமிடங்களாக இங்கு வந்து வீடுகளை வாடகைக்கு எடுத்து தொழிலாளர்களோடு தொழிலாளர் போல் தங்கி வரும் நக்சலைட்டுகளை, காவல் துறையினர் அடையாளங்கண்டு அப்புறப்படுத்த வேண்டும்''என்கிறார் அண்ணா பனியன் தொழிலாளர் சங்கத் தலைவர் சென்ட்வின் மணி.

திருப்பூரில் பின்தங்கிய மாணவர்கள் மற்றும் ஓரளவு படிப்பறிவு கொண்ட பனியன் தொழிலாளர்களைத் தங்கள் பாதைக்குக் கொண்டு செல்ல நக்சலைட்டுகள் மூளைச் சலவை செய்து வருவதாகவும் நகரில் நிலவும் சமூக ஏற்றத்தாழ்வுகளை மையப் படுத்தி நக்சல் அமைப்புகள் செயல்பட்டு வருவதாகவும் எச்சரித்துள்ளது உளவுத் துறை. இதனால் திருப்பூர் மற்றும்

# திருப்பூர்! அதிர்ச்சி ரிப்போர்ட்

அதன் புறநகர்ப் பகுதிகளில் கியூ பிரிவுப் போலீஸார் தீவிரக் கண்காணிப்புப் பணிகளில் தற்போது ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்.

நக்சல் அமைப்பின் முக்கிய தலைவரான சுந்தரமூர்த்தி கைது செய்யப்பட்டுள்ள நிலையில், அமைப்பின் முக்கிய நபர்களான காளிதாஸ், நவீன், ரஞ்சித் ஆகிய மூன்று பேரும் திருப்பூர்ப் பகுதியில் பதுங்கியிருக்கக் கூடுமெனவும் சந்தேகிக்கப்படுகிறது.

''பெரியகுளம் - முருகமலை வனப் பகுதியில் பொது மக்கள் சுற்றி வளைத்துப் பிடித்த நக்சலைட் கும்பலில் ஏழு பேர் தப்பிச் சென்றுவிட்டனர். மீதம் மூன்று நக்சலைட்டுகள் மட்டுமே போலீஸ் வசம் ஒப்படைக்கப்பட்டனர். அதில் நக்சலைட் பழனிவேல் கூறிய தகவலைக் கொண்டுதான், திருப்பூரில் தங்கியிருந்த சுந்தரமூர்த்தி உட்பட நக்சலைட்டுகள் மூவரைக் கைது செய்துள்ளது கியூ பிராஞ்ச் போலீஸ். மேலும், வெளி மாவட்டங்களில் கொலை வெறித்தாண்டவம் ஆடிவிட்டு வருகின்ற கூலிப்படையினர்க்கும் பதுங்குமிடமாக மாறி வருகிறது திருப்பூர். தி.மு.க. ஆட்சிக் காலத்தில்தான் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடக்கின்றன'' எனக் குற்றம் சாட்டுகிறார் கோவை புறநகர் (அதிமுக) சிறுபான்மையினர் நலப்பிரிவு மாவட்டச் செயலாளர் ஜெ.ஆர். ஜான்.

## வழிப்பறித் திருடர்களும், கூலிப்படையினரும் திருப்பூரின் தீராத பிரச்சனைகள்



* எஸ். தமயந்தி



* செண்ட்வின் மணி

''நக்சலைட்டுகள் மட்டுமல்ல; வழிப் பறித் திருடர்களும், கூலிப்படையினரும் திருப்பூர் நகரின் தீராத பிரச்னை! இங்கு வேலைக்கு ஆட்கள் பற்றாக்குறை எப்போதுமே இருந்து வருகிறது. அதனால் வெளிமாவட்டங்களிலிருந்து ஆட்கள் பலரும் வேலை தேடி இங்கு வந்தபடியே இருக்கின்றனர். அந்த நிலையைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்கின்றனர் - கூலிப் படையினரும் மற்றும் நக்சலைட்டுகளும். அவர்களைக் களைந்தெறிய வேண்டியது காவல்துறையின் கடமை!'' என்கிறார் வழக்கறிஞர் எஸ். தமயந்தி.

''தற்போதைய மக்கள் தொகை திருப்பூரில் பத்து லட்சத்துக்கும் மேல் எனச் சொல்லப்படுகிறது. இவர்களில் பெரும்பான்மையினர் வெளிமாவட்டங்களிலிருந்து வந்து தங்கியிருப்பவர்கள் ஆவார்கள். புறநகர்ப் பகுதிகளில் வந்து தங்குபவர்களில் பனியன் தொழிலாளி யார், தீவிரவாதி யார்? என்று பக்கத்து வீட்டுக்காரர்களுக்கே தெரியாது. நிறுவனங்கள் எதுவாக இருந்தாலும் வேலை கேட்டு வருபவர்களை, அவர்களது குடும்ப அட்டையின் நகலைப் பெற்று வேலைக்குச் சேர்க்க வேண்டும். வீட்டு உரிமையாளர்கள் ஒவ்வொருவரும் வாடகைக்கு வீடு கேட்டு வருபவரிடம், அவர்களது வாக்காளர் அடையாள அட்டையின் நகல் மற்றும் குடும்ப அட்டையின் நகல் போன்றவற்றைப் பெற்றுக் கொண்டு வீடு தர வேண்டும்'' எனச் சொல்கிறார் நல்லூர் நுகர்வோர் நல மன்றத் தலைவர் சண்முக சுந்தரம்.

- திருவரசு

## உள்ளும் புறமும்...

# ஒரு பெண்

கிரிஜா தேவி, வயது 26. பீகாரிலுள்ள பூர்ணியா மாவட்டத்திலுள்ள பரஹகோமா என்னும் கிராமத்தைச் சேர்ந்தவர். நிறை மாத கர்ப்பிணி. மூன்று வாரங்களுக்கு முன்பு பிரசவத்துக்காகத் தாய் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்த கிரிஜாவை, சிலர் வழி மறித்திருக்கிறார்கள். என்ன; ஏது என்று கேட்பதற்குள், மூங்கில் கம்புகளால் அவரை மாறிமாறி அடித்துப் போட்டிருக்கிறார்கள். கைகளைத் தட்டி ஓர் ஆட்டோவை நிறுத்தி, சாவகாசமாகப் பேரம் பேசி, அதில் ஏறிப் போயிருக்கிறார்கள்!

அவர்கள் அந்தக் கிராமத்திலுள்ள



பெரும்புள்ளிகள். சகலமானவர்களையும் அடிக்க, உதைக்க, அரவணைக்க அவர்களுக்கு உரிமை உண்டு. பஞ்சாயத்து நடத்துவார்கள். ஒத்துவரவில்லை என்றால் தூக்கிப் போட்டுப் பந்தாடுவார்கள். அந்தக் கிராமத்திலுள்ள பெண்கள் என்ன செய்ய வேண்டும்; என்ன செய்யக்கூடாது போன்றவற்றை என்று கண்காணிக்கும் திருப்பணி அவர்களுடையது.

கிரிஜா செய்த தவறு இதுதான். முதல் கணவனின் கொடுமையைத் தாங்க முடியாமல் அவரை விலக்கி விட்டு, இரண்டாவது திருமணம் செய்துகொண்டதுதான்.

ஒரு தலித், அதிலும் ஏழை தலித். தவிரவும், ஒரு பெண். நியாயம் கிடைக்குமா? கிரிஜாவுக்கு அரசியலமைப்புச் சட்டமும் தெரியவில்லை. எழுதப் படிக்கத் தெரியாதவர். இந்தியா முழுவதுமே உள்ள பிற்படுத்தப்பட்ட பெண்களின் கதி இதுதான் என்னும் விழிப்புணர்வும் அவருக்கு இல்லை. வழக்கு பதிவு செய்து சம்பந்தப்பட்டவர்களைக் கூண்டில் நிறுத்த தண்டனை வாங்கிக் கொடுக்க கணவரை அழைத்துக்கொண்டு காவல்துறையை நாடிச் சென்றிருக்கிறார்.

இன்று வா, நாளை வா என்று மூன்று வாரம் அவரை அலைக் கழித்த பிறகு, காவல் துறை அசுவாரஸ்யமாக வழக்கு ஒன்றை பல்குத்திக் கொண்டே பதிவு செய்திருக்கிறது. தன்னைத் தாக்கியவர்களைப் பற்றிய அத்தனை விவரங்களையும் கிரிஜா காவல் துறையிடம் சொல்லியிருக்கிறார்.

கிரிஜா சொன்ன விலாசங்களை பாக்கெட்டில் செருகிக் கொண்டு போயிருக்கிறார்கள்.





காக, கிரிஜாவை நாடியிருக்க மாட்டார்கள் என்பது நிச்சயமில்லை.. புல்லானாலும் புருஷன் என்று முதல் கணவருடனே இருந்திருந்தால், நித்தம் நித்தம் வன்முறையோடு வாழ வேண்டியிருந்திருக்கும். கையில் மூங்கிலோடு கலாசார காவலர்கள்!

ஓர் ஆணின் பின்னால் பதுங்காத பெண்ணை இந்தச் சமூகம் பிரச்னைக்குரியவராக மட்டுமே பார்க்கிறது. யோசித்துப் பாருங்கள்... அபார்ட்மெண்ட் ஒன்றை வாடகைக்கு எடுக்க வேண்டுமென்றால் கூட 'யார் நீங்கள்? திருமணமானவரா? உங்கள் கணவர் எங்கே? வரவில்லையா? ஓ, திருமணம் ஆகாதவரா? ஏன் திருமணம் செய்துகொள்ளவில்லை? என்ன பிரச்னை? அட, யார் இந்தக் குழந்தை? என்னது, முதல் கணவரின் குழந்தையா? ஓ, விவாகரத்து ஆனவரா? சரிதான். ஆனால், பாருங்கள். இப்போதைக்கு நாங்கள் வீட்டை வாடகைக்கு விடுவதாக இல்லை.

எல்லாவற்றையும் வெளிப்படையாகச் சொல்லியாக வேண்டும். எல்லோரையும் சமாதானப்படுத்த வேண்டும். கணவரை, அப்பாவை, அம்மாவை, சகோதரர்களை, சகோதரிகளை, சொந்தக்காரர்களை, அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களை, அபார்ட்மெண்ட் ஓனரை, காவல்துறையை, நீதிமன்றத்தை, சமூகத்தை, நாய் குட்டியை...

# சில கேள்விகள்!

முதல் வீட்டில் இருப்பவர்களைக் கேட்டிருக்கிறார்கள். ஐயா டீ குடிக்கப் போயிருக்கிறார் என்று சொல்லியிருப்பார்கள் போல. கிளம்பி வந்துவிட்டார்கள். காத்திருந்து அழுக்க வேண்டாமோ, அல்லது ஒரு நடை டீக் கடைக்குப் போய், அங்கேயே வளைத்திருக்க வேண்டாமோ, செய்யவில்லை போகட்டும். இரண்டாவது நபர் என்ன ஆனார்? அவர் இரண்டாவது ஆட்டம் சினிமாவுக்குப் போயிருக்கிறார். மற்றொருவர்? தூங்கிக் கொண்டிருக்கிறார். இன்னொருவருக்கு ஜலதோஷம்; இன்னொரு இன்னொருவர் ஷேவிங் செய்து கொண்டிருக்கிறார்.

கிரிஜா மீண்டும் திருமணம் செய்து கொள்ளாமல் இருந்திருந்தால், மேற்படி புண்ணியவான்கள் வேறு காரணங்களுக்

பெண்கள் மீதான வன்முறை ஒரு இன்ச் கூட குறையவில்லை. மூங்கில் கம்பால் அடித்தால்தான் வலிக்கும் என்றில்லை. மூர்க்கமான வார்த்தைகளால்கூட அடிக்க முடியும், காயப் படுத்தமுடியும். காயப் படுத்திக்கொண்டுதான் இருக்கிறார்கள். ○

மருதன்




# கல்கி





2007 ஆகஸ்ட் 5
சர்வஜித் ஆடி 20
மலர் : 66
இதழ் : 1


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்றதாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## பதவிக்குப் பெருமை சேர்த்தவர்!

**ரா**ஷ்டிரபதி பவனிலிருந்து வெளியேறியதுமே அப்துல் கலாம் அண்ணா பல்கலைக் கழகத்துக்குச் செல்கிறார் - மாணவர்களுக்குப் பாடம் நடத்த. அதற்கு மறுதினமே காந்தி கிராமத்துக்குப் போகிறார் - அங்கேயுள்ள பல்கலைக் கழகத்தில் உரையாற்ற! இந்தியாவின் தொழில்நுட்ப வளர்ச்சியும், கிராமப்புற வளர்ச்சியும் கைகோக்க வேண்டும் என்கிற தமது ஆதர்ச திட்டத்துக்கு உழைக்க ஆரம்பித்துவிட்டார் கலாம் என்பதை உணர்த்துகின்றன இந்த விஜயங்கள்!

குடியரசுத் தலைவராகப் பதவி வகித்த காலத்தில் சர்ச்சைகளுக்கும் அரசியலுக்கும் அப்பாற்பட்டவராகத் திகழ்ந்து, நாடு முழுவதும் பயணம் செய்து, அனைத்துத் துறைகளிலும் ஈடுபாடு காட்டி, அனைத்து வயதினருக்கும் ஆதர்சமாக விளங்கி, குறிப்பாக இளைஞர்களின் இதயங்களை வென்றிருக்கிறார் கலாம்!

அவநம்பிக்கையோடு இருந்த ஒரு தலைமுறையின் இதயங்களில் ஆதர்சங்களை விதைத்து, கனவு காணச் செய்திருக்கிறார்.

இத்தனையையும் அவர் செய்தது தமது அபாரமான குரல் வளத்தினாலோ அல்லது மயக்கும் மொழித் திறனினாலோ அல்ல! எளிமையான சொற்கள்தான்; சராசரி குரல்தான். ஆனால், அவரது வார்த்தைகள் இதயத்திலிருந்து வந்தன. அவரது கனவு நம்பிக்கையை அஸ்திவாரமாகக் கொண்டு அமைக்கப்பட்டது. அவரது நம்பிக்கை, ஆழ்ந்த அறிவினாலும்














சிந்தனையினாலும் விளைந்தது. அத்தனையையும் நாட்டுக்கு அர்ப்பணமாக்கினார் அப்துல் கலாம். அதனால்தான் ராஷ்டிரபதி பவனிலிருந்து வெளியேறியதுமே ஒரு கல்லூரிக்குள் அவரால் நுழைய முடிந்திருக்கிறது.

சமீப காலத்தில் எந்த அரசியல் தலைவராலும் விளைவிக்க முடியாத ஓர் உற்சாகத்தையும், உத்வேகத்தையும் சராசரி மக்களிடையே விளைவித்திருக்கும் அப்துல் கலாம், தமது பதவியிலிருந்து விடைபெறும்போது ஆற்றிய உரையில் கூறியிருப்பவை அனைத்துமே முத்தான கருத்துகள்தான் என்றபோதிலும் அவற்றுள் கல்வி குறித்து அவர் கூறியிருப்பது முதன்மை கவனத்துக்கும், செயல்பாட்டுக்கும் உரியது.

''சமூக - பொருளாதார பாரபட்சமின்றி, தகுதி வாய்ந்த அனைத்து மாணவர்களுக்கும் அவரவர் விரும்பும் கல்வி பயில வாய்ப்புத் தரப்பட வேண்டும்... அந்தக் கல்வி நல்ல மதிப்பீடுகளையும் புகட்டுவதாக அமையவேண்டும்...'' என்று பேசியிருக்கிறார் கலாம்.

இதை மட்டும் சுதந்திர இந்தியாவின் முதல் குறிக்கோளாக ஏற்றிருப்போமேயானால், அப்துல் கலாம் தமது பதவிக் காலத்தில் ஒரு வல்லரசின் குடியரசுத் தலைவராகவே திகழ்ந்திருப்பார்! இந்திய சுதந்திரத்தின் வைரவிழா ஆண்டில், அப்துல் கலாம் நமக்குக் கல்வியின் முக்கியத்துவத்தை நினைவூட்டி, நாட்டின் முதல் குடிமகன் பதவியிலிருந்து விடைபெற்றிருக்கிறார்.

சிலர் பதவிக்கு ஆசைப்படுவார்கள்; சிலர் பதவிக்குப் போட்டி போடுவார்கள்; சிலர் பதவியில் இருப்பார்கள்; வேறு சிலர் பதவியில் அமர்த்தப்படுவார்கள்... ஆனால், வெகு சிலரே பதவியை அலங்கரிப்பார்கள். இந்தியக் குடியரசுத் தலைவர் பதவியை அலங்கரித்து, அதற்குப் பெருமை சேர்த்த அபூர்வ மனிதர் அப்துல் கலாம். அவர் பொது வாழ்வில் தொடர்ந்து ஈடுபடுவது நமது நாடு செய்த பாக்கியம். ●

# துரத்தும் நிழல்!

தினசரி வேலைத் தளத்தில் நரசய்யா பற்றிய புகார்கள் பெருகிக் கொண்டிருந் தன. அவனை என்ன செய்வதென்று தனபாலுக்குப் புரியவில்லை.

கடந்த மூன்று தினங்களாக அவன் வேலைக்கும் வரவில்லை. அவன் தங்கி இருக்கும் 'லேபர் கேம்பிற்கு' ஃபோன் பண்ணிக் கேட்டபோதும் சரியான தகவல் எதுவும் கிடைக்கவில்லை. எங்கு போய்த் தொலைந்தான்?

அவன் வேலைக்கு வந்தாலும் பிரச்னை; வராவிட்டாலோ பெரும் பிரச்னை. அவன் செய்கிற முக்கிய வேலை - கழிவறைகளைச் சுத்தப்படுத்துவது. அவன் வேலைக்கு வராத பட்சத்தில், கழிவறைகள் நாறத் தொடங்கிவிடும்.

''காலையில் ஒரு தரம்; மத்தியானம் ஒரு தரம்னு கக்கூஸைக் க்ளீன் பண்றதோட சரி. அவசர ஆத்திரத்துக்கு ஆள் இல்லாத குறைக்கு ஏதாவது சின்ன வேலை கொடுத் தாலும் செய்ய மறுத்து முறைச்சுட்டுப் போயிடுறான் ஸார்...'' - என்று தனபாலி டம் நேரிடையாகவே குற்றம் சுமத்தினார் கள்- அவனுடைய உதவிப் பொறியாளர் கள்.

எப்போது யார் டாய்லெட்டை உப யோகிக்கப்படுத்தினாலும் சுத்தமாக வைத் துக் கொள்ளும்படியும் சத்தம்போட்டுக் கொண்டே இருப்பான். 'என்னத்தத் தான் திங்கிறாய்ங்களோ; நாத்தமெடுத்த பயலுவ...' என்று தொடங்கி கெட்ட கெட்ட வார்த்தைகளில் திட்டிக் கொண்டி ருப்பதைப் பார்த்து தனபாலே அவனை அழைத்து பல தடவை கண்டித்து அனுப்பி யிருக்கிறான்.

ரொம்பவும் கோபப்பட்டுப் பேசினால் ''எனக்கு வேலை மாத்திக் கொடுங்க ஸார்; இந்த அசிங்கம் புடிச்ச வேலைய வேற யாரையாவது விட்டுச் செய்யச் சொல்லுங்க...'' என்கிறான். இது



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு ரூ.10,000 பெறும் கதை**

சம்பந்தமாக வேலைத் தளத்தில்கூட பெரும் பிரச்னை வெடித்து, அப்புறம் நரசய்யாவின் தயவால்தான் முடிவுக்கு வந்தது.

ஆரம்பத்தில் கொத்தனாருக்கு உதவியாளாக நரசய்யா வேலை பார்த்த போதெல்லாம் ஒரு பிரச்னையும் இல்லை; மிகவும் சுறுசுறுப்பாகவும் ஆர்வமாகவுமே வேலை பார்த்தான். அவ்வப்போது தனபாலிடம் வந்து, கட்டு வேலை எல்லாம் நன்றாக வருவதாகவும், அதனால் தன்னைத் தனியாக ஒரு பகுதியில் கட்டு வேலை செய்ய அனுமதிக்கும்படியும் பணிவுடன் கேட்டிருக்கிறான். இவனும் ஃபோர்மென்களை அழைத்து அவனுக்கு பிளாக் கட்டும் வேலை பிரித்துக் கொடுக்கும்படி உத்தரவும் போட்டிருக்கிறான். ஆனால், அதற்குள் என்னன்னவோ நடந்துவிட்டது.

சென்னையில் தனபால் பார்த்த கட்டுமான வேலைகளிலெல்லாம் 'சைட் ஆபீஸ்' என்பது கீற்றுக் கொட்டகையும் புழுதித் தரையும் நான்கைந்து மேஜை நாற்காலிகளும் இருக்கும். அவ்வளவுதான். கழிவறை வசதிகளுக்கெல்லாம் திறந்த வெளிகளையோ, பொதுக் கழிவறைகளையோதான் தேடிப் போக வேண்டியிருக்கும். அபூர்வமாய் சைட் ஆபீஸிலேயே கழிவறை வசதியிருந்தாலும் சுத்தமாக இருக்காது.

சோ.சுப்புராஜ்



ஆனால், தனபால் துபாய்க்கு வேலைக்கு வந்ததும் இங்கு அவன் பார்த்த போர்ட்டோ கேபின்கள் மரத்தாலும் பிளாஸ்டிக்குக்களாலும் வண்ணத் தகடுகளாலும் வடிவமைக்கப்பட்டும், குளிர்சாதன வசதி பொருத்தப்பட்டும் இருந்ததோடு அல்லாமல், அலுவலர்களுக்காகவும் வேலையாட்களுக்காகவும் இணைக்கப்பட்டிருந்த கழிவறை வசதிகள் நம்ப முடியாத சுத்தத்துடன் இருந்ததுதான்!

இவனுடைய சைட்டில் வேலை தொடங்கி ஓரிரு வாரங்களுக்குள் அவை மிக மோசமாக நாறத் தொடங்கின. ஒருமுறை வேலைகளை மேற்பார்வையிட வந்த தனபாலின் ஆங்கிலேய மேலதிகாரி வேலையில் நிறைய முன்னேற்றங்களும் சிறப்புகளுமிருப்பதாய்ப் பாராட்டிக் கொண்டே வந்தவர், அவனே சற்றும் எதிர்பார்க்காத ஒரு தருணத்தில்

சட்டென வேலையாட்களின் கழிவறைக் குள் புகுந்து விட்டு, அதே வேகத்தில் மூக்கைப் பிடித்துக் கொண்டு வெளியே வந்தவர்,

''ஆங்கிலக் கெட்ட வார்த்தைகளால் அபிஷேகம் செய்துவிட்டு, கழிவறைகள் இதே நிலையில் தொடர்ந்தால், நீ இந்தியாவுக்கே திரும்பிப் போக வேண்டி யதுதான் என எச்சரித்துவிட்டுப் போனார்.

தனபாலுக்கு வருத்தமாகவும் அவமான மாகவும் இருந்தது. உடனே ஃபோர்மென் களையும் பொறியாளர்களையும் அழைத்து தினசரி குறைந்தது இரண்டு தடவைகள் கழிவறைகளைச் சுத்தம் பண்ணுவதற்கு ஆட்களை நியமிக்கும்படி உத்தரவிட்டான்.

யாருமே முன் வரவில்லை என்பது அவனுக்கு பதிலாகச் சொல்லப்பட்டதும் தான் அதன் தீவிரம் உறைத்தது.

முதலில் ஆபீஸ் பையன் செய்யும்படி சொன்னான் தனபால். ''அதெல்லாம் என்னால் முடியாது; வேறாள பார்த்துக்கோ ஸார்...'' என்று வெடுக்கென பதில் சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்து போனான். அடுத்த கட்டமாக வேலை யாட்களிடம் பேசிப் பார்த்தான்.

''நல்ல கதையா இருக்கே! ஒரு இலட் சம், ஒன்றரை இலட்சம்னு ஏஜெண்ட் களுக்குப் பணம் குடுத்து இங்க கக்கூஸ் குழுவுறதுக்கா வந்துருக்கோம்? அதெல் லாம் முடியாது'' என்று அவர்களும் முகத்தில் அடித்ததுபோல் மறுத்து விட் டார்கள். தீர்மானமான முடிவோடு மீட்டிங்கிற்கு ஏற்பாடு செய்தான்.

''நம்முடைய கழிவறைகளை நாமே சுத்தப்படுத்திக் கொள்வதில் என்ன கேவலமிருக்கிறது'' என்று தொடங்கி சின்னதாய் ஓர் உரை நிகழ்த்திவிட்டு, அவர்களில் லேபர் பிரிவிலிருந்து பன்னி ரெண்டு பேரை ஆறு டீம்களாகப் பிரித்து ''தினசரி ஒரு டீம் காலையில் சுமார் இரண்டு மணி நேரம் மட்டும் கக்கூஸைக் கிளீன் பண்ணிவிட்டு மற்ற வேலைகளைச் செய்யப் போய்விடலாம்'' என்று தன் முடிவை அறிவித்தான் தனபால்.

வேலையாட்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குள் காச் மூச்சென்று பேச, அந்த இடம் ஒரே சத்தக்காடாய் இருந்தது. வெங் கடேசன் மட்டும் எழுந்து இன்னின்ன ஆள் இன்னின்ன வேலைதான் செய் யணும்னு ஒரு கணக்கிருக்கு... அதனால, நம்ம சைட்ல இப்ப இருக்கிறவங்கள்ல நரசய்யாவால மட்டும்தான் அதைச் செய்ய முடியும் என்று சொல்லவும், நரசய்யா எழுந்து வெங்கடேசனிடம் சண்டைக்குப் போனான்.

தனபால் அவர்களை அதட்டி அமைதிப் படுத்திவிட்டு வெங்கடேசனிடம் மிகக் கடுமையாகச் சொன்னான். ''இங்க பார், இந்தச் சைட்டில் நீயும் லேபரர்; அவனும் லேபரர். ஏன் அவன் மட்டும் கக்கூஸ் கழுவுற வேலையைச் செய்யணும்! நீ ஏன் அதே வேலையைச் செய்யக் கூடாது? நாளையிலிருந்து நீதான் 'அந்த' வேலை யைச் செய்யிற. இது என் ஆர்டர்...'' என்று சொல்லவும் வெங்கடேசன் மிகவும் கோப மாக எழுந்து ''யாரைப் பார்த்து என்ன வேலை செய்யச் சொல்ற? என் சாதி என்ன! குலம் கோத்ரம் என்ன! இதுகூட புரியாம நீ என்ன பெரிய '......' என்ஜினீயரு!'' -ரௌத்ரமானான்.

தனபாலுக்கே பயமாய் இருந்தது. அப்புறம் சமாளித்துக் கொண்டு, ''இங்க பார் வெங்கடேஷ், உன்னுடைய சாதித் திமிரைக் காட்டுறதுக்கு இது இந்தியா இல்ல; அங்கயும் கூட இப்பல்லாம் இது சாத்தியமில்ல'' என்றான் பொறுமையாக.



''துபாய்க்கு வேலைக்கு வந்தா நீ சொல்ற எடுபிடி வேலையெல்லாம் செய்யணுமா என்ன? தோட்டி வேலை செய்ற சாதியிலயா பொறந்திருக்கோம்'' என்றான் கோபமாக.

''இங்க பாருங்க, என்னால உங்க யாரோட வாழ்க்கையையும் பாழாக்க முடியாது. அதே சமயத்துல என்னோட பிரச்னையையும் நீங்க புரிஞ்சுக்கணும். அன்னைக்கு நம்ம சீஃப் வந்து எப்படிச் சத்தம் போட்டுட்டுப் போனான்னு தெரியுமில்ல! நாம யூஸ் பண்ற கக்கூஸ நாமளே க்ளீன் பண்றதுல எதுக்கு வீண் பிடிவாதம்! நம்ம மகாத்மா காந்தி கூட கக்கூஸ் கழுவி இருக்கார் தெரியும்ல... ப்ளீஸ்... கொஞ்சம் கோ-ஆப்ரேட் பண்ணுங்க...'' தனபால் இறங்கி வந்து பொதுவாய் எல்லோரிடமும் பேசினான்.

எவ்வளவு சொல்லியும் யாரும் கேட்பதாய் இல்லை. தனபாலுக்கு தான் தோற்றுப் போன உணர்வு பீறிட்டது.

தனபாலின் உதவிப் பொறியாளர்கள் வந்து ''நீங்க இப்படி எல்லாம் மயிலே மயிலே இறகு போடுன்னு கெஞ்சிக்கிட்டிருந்தா காரியம் ஆகாது ஸார். நரசய்யாதான் இதுக்கு சரியான ஆளு. அவனைக் கூப்பிட்டு மிரட்டி செய்யிடான்னு சொல்லுங்க; கண்டிப்பா செய்வான்...'' என்று ஆலோசனை சொன்னார்கள்.

''யாருமே செய்ய முன் வராதப்போ நரசய்யாவ மட்டும் ஏன் கட்டாயப்படுத்தணும்? ஏன் எல்லா விரல்களும் அவனை நோக்கியே நீள்கின்றன...'' ஆச்சர்யமாகக் கேட்டான் தனபால். ''என்ன ஸார் இன்னுமா புரியல? அவங்க குடும்பத் 'தொழிலே' இதுதான் ஸார். ஊர்ல இவனோட குடும்பமே காலங்காலமா 'இதை' தான் பண்ணிக்கிட்டு இருக்கு'' என்றார்கள்.

தனபாலுக்கும் வேறு வழி தெரியவில்லை. ஆங்கிலேய மேலதிகாரி மீண்டும் சைட் விசிட் வருவதற்குள் இந்தக் கழிவறைப் பிரச்னை தீர்க்கப்பட்டால் அவனுக்கும் நிம்மதியாய் இருக்கும் என்று தோன்றியதால் நரசய்யாவைத் தனியாக அழைத்துப் பேசினான். ''உனக்குச் சொந்த ஊர் எதுப்பா...'' மெதுவாய் ஆரம்பித்தான்.

''ஆந்திராவில் குண்டூரு ஸார்...''

''இவ்வளவு சுத்தமா தமிழ் பேசறயே எப்படி?'' ஆச்சர்யமாய்க் கேட்டான் தனபால்.

''ஆந்திராக்காரன் தமிழ் பேசறதுல என்ன ஸார் பெரிய ஆச்சர்யம்...'' சிரித்தபடி சொன்னான்.

''நான் எதுக்கு உன்னை வரச் சொன்னேன்னா, எனக்காக நீ மறுக்காம ஒரு வேலை பண்ணணும். டாய்லெட் கிளீன் பண்ற வேலையை நாளையிலிருந்து பண்ணணும். செய்வியா? கொஞ்ச நாளைக்கு செய்; போதும். அப்புறம் மாற்று ஏற்பாட்டுக்கு வேற சைட்லருந்து ஆள் கிடைச்சதும் உன்னை நீ ரொம்ப ஆசைப்பட்ட கொத்தனார் வேலைக்கு மாத்தி விடுறேன்...'' தயங்கித் தயங்கித்தான் தனபால் கேட்டான்.

''பரவாயில்ல; செய்றேன் ஸார். நீங்க இவ்வளவு கேட்கும்போது மத்தவங்க மாதிரி செய்ய மாட்டேன்னு முரண்டு பிடிக்கவா முடியும்?'' அவன் குரல் கம்மி கண்களில் கண்ணீர் பெருகியது.

ஏன் அழறே... உனக்கு இஷ்டமில்லைனா சொல்லு வேறு ஏற்பாடு பண்ணிக்கலாம்..

''அதெல்லாம் ஒண்ணுமில்ல ஸார். நான் பிறந்த விதிய நெனச்சேன்... தானா கண்ணீர் பெருகிருச்சு... அவ்வளவுதான். நானும் நான் பிறந்த சாதியிலருந்து - அதன் இழிவுகளிலிருந்து விலகிடணும்னு ஓடி ஓடிப் பார்க்கிறேன். அது நிழல் மாதிரி துரத்திக்கிட்டு வருதே, என்னதான் செய்

''நான் எதுபேசினாலும் என் மனைவி எதிர்த்துப் பேசுகிறாள்.''

''எப்போதிலிருந்து?''

''எனக்குக் கல்யாணம் ஆனதிலிருந்துதான்.''

— கண. சிவகுமார்

யட்டும்! தலைமுறை தலைமுறையா சாக்கடையிலயும் மலத்துலயும்தான் பொரண்டுக்கிட்டு இருக்கிறோம். இதுக்கு விடிவே வரமாட்டேங்குது.

முதல்ல சவூதி அரேபியாவுக்குத் தோட்ட வேலைக்குன்னு கூட்டிட்டுப் போனாங்க. அப்புறம் பண்ணையில இருக்கிற டாய்லெட்டுகள கழுவ விட்டுட்டாங்க. இங்க வந்தும் இந்த நாறப் பொழப்புதானான்னு ரெண்டு வருஷக் காண்ட்ராக்ட் முடிஞ்சதும் போதும்னு ஊருக்கே திரும்பிப் போயிட்டேன். அப்புறந்தான் துபாய்ல கட்டட வேலைக்குன்னு இந்த கம்பெனிக்கு வந்து சேர்ந்தது. உங்களுக்கே தெரியுமே - கொத்தனார் வேலையெல்லாம் கத்துக்கிட்டிருந்தேன். அதுக்குள்ள மறுபடியும் பழைய குருடி; கதவைத் திறடின்னு... விடுங்க ஸார்...

என் சாதி அடையாளங்களை அறிந்திடாத தீவுக்கு என் குடும்பத்தையும் கூட்டிக் கொண்டு போய் குடியேறி வாழணும் ஸார்... பேராசைதான். ஆனா இப்போதைக்கு, முதல் தலை முறையா என் தங்கச்சி ஒருத்தி நல்லாப் படிக்குறா. முழுமூச்சா அவளைப் படிக்க வைக்கிறதுக்காகத்தான் ஓடி ஓடி சம்பாதிச்சக்கிட்டு இருக்கிறேன்.''

''காலம் ரொம்ப மாறிட்டு வருது நரசய்யா. இங்கு நல்லா சம்பாதிக்க நிறைய பணம் கொண்டு போய் இந்தியாவுல நிலம் வீடுன்னு வாங்கிப் போட்டு வாழத் தொடங்கும்போது நீ சொல்கிற இழிவுகளெல்லாம் தானா உதுந்துடும்; கவலைப் படாதே...'' என்று அவனுக்கு நம்பிக்கை கொடுத்து அனுப்பி வைத்தான்.

ஆனால், நரசய்யா தொடர்ந்து மூன்று நாட்கள் வேலைக்கு வராமல் இருப்பது கவலையாய் இருந்தது தனபாலுக்கு.



**நரசய்யா கிளம்பிப் போனதும் தனபாலுக்கு அந்தக் கேள்வி எழுந்தது. இனி அவன் என்ன ஆவான்?**

அவன் வேலைக்கு ஆபத்தாய்க்கூட முடிந்து விடலாம்.

கடந்த எட்டு மாதங்களில் ஒருநாள் கூட நரசய்யா விடுப்பே எடுத்ததில்லை. திடீரென்று அவனுக்கு என்னவாகி விட்டது.

நல்லவேளையாக மூன்றாம் நாள் மத்தியானத்துக்கு மேல் தனபாலின் கேபினுக்குள் நுழைந்தான் நரசய்யா. அவனுக்குத் தாங்க முடியாத அளவுக்கு ஏதோ பெரிய துக்கமோ இழப்போ ஏற்பட்டிருக்கிறது என்பது அவனுடைய தோற்றத்திலிருந்தே தெரியந்தது.

தனபால் அவனது இருக்கையிலிருந்து எழுந்து போய் ஆறுதலாய் அவன் தோளைத் தொட்டு ''என்னாச்சு நரசய்யா...'' என்றான். அதற்கு மேல் அடக்க முடியாது என்பது போல் வெடித்து அழத் தொடங்கி விட்டான் நரசய்யா. அவனால் நிற்கவே முடியாமல் அறையின் மூலையில் குறுகி உட்கார்ந்தபடி குலுங்கி அழத் தொடங்கினான். அவன் அழுது முடிக்கட்டுமென்று தனபாலும் அமைதியாகக் காத்திருந்தான்.

''நல்லா நாடகம் போடுறான். உஷாரா இருங்க ஸார்... ஏமாந்துடாதீங்க...'' குசுகுசுவென்று ஆங்கிலத்தில் தனபாலிடம் சொன்னான் அவனுடைய உதவியாளன் ஒருவன்.

''வாயைக் கொஞ்சம் மூடிட்டுப் பேசாம இருங்க. எல்லாத்தையும் கொச்சைப்படுத்தாதீங்க...'' என்று தனபால் அவனிடம் எரிந்து விழவும், ''அப்புறம் உங்க இஷ்டம்'' என்றபடி உதவியாளன் எழுந்து போனான். கொஞ்சம் அழுகை குறைந்து விசும்பலினூடே ''தலைமை ஆபீஸிலிருந்து என்னோட பாஸ்போர்ட்ட வாங்கிக் குடுங்க ஸார்... நான் உடனே ஊருக்குப் போகணும்...'' என்றான் நரசய்யா.

''அதுக்கென்னப்பா ஏற்பாடு பண்ணிட

'' 'ஏழுமலை' அர்ஜுன் அத்தியாயத்துக்கு அழகு சேர்த்த படம். இப்போது 'மருதமலை' அவர் மார்க்கெட்டுக்கு வலு சேர்க்க வருகிறது'' என்கிறார் ஆஸ்கார் ஃபிலிம்ஸ் ரவிச்சந்திரன். ஆக்ஷன், சென்ட்டிமெண்ட், ரொமான்ஸ் என்று தேர்ந்த கலவையாக 'மருதமலை' தயாராகி வருவதில் மகிழ்ச்சியிலிருக்கிறார் அர்ஜுன்.''

'ரொம்ப நாளா காணலையே...' என்றால்,

''எதுவுமே திகட்டத் திகட்ட தந்தா அலுப்பு தட்டிடும். நடிப்பும் அப்படித்தான். ஒரு சின்ன கேப்புக்கு அப்புறம் ஃப்ரஷ்ஷா வரேன். மருதமலை உங்களை மயக்கப் போறது நிச்சயம்'' என்கிறார்.

''அந்த அளவு தலை சுத்துமா?'' - நாம் நமது வேலையைக் காட்ட,

''உங்களைத் திருத்தவே முடியாது!'' என்று வம்புக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார்.

- **ரேவதி**



லாம்... என்ன விஷயமா ஊருக்குப் போகணும்னு சொல்லு. நான் எழுதி அனுப்பி வாங்கி தர்றேன்...''

''போச்சு ஸார்; எல்லாம் போச்சு. குடும்பமே அழிஞ்சு சின்னாபின்னமா போச்சு. கொலைகாரப்பாவிங்க... சீரழிச்சுட்டாய்ங்க... ஐயோ நான் என்ன பண்ணுவேன்?'' என்று மறுபடியும் 'ஓ'வென்று தரையில் புரண்டு அழத் தொடங்கினான்.

''நீங்க கூடச் சொல்லி இருந்தீங்கல்ல ஸார்; நிலம், வீடுன்னு வாங்கி வசதியா வாழத் தொடங்கிட்டா நாங்க பொறந்த சாதி இழிவு எங்கள விட்டு உதுந்துடும்னு... உதிரலையே ஸார்; உயிரையில்ல காவு வாங்கிருச்சு... சவூதியிலயும் துபாயிலயும் உழைச்ச காசை குருவி சேர்க்குறாப்ல சேர்த்து வச்சு ஊர்ல ஒரு ரெண்டு ஏக்கரா விவசாய நெலம் வாங்குனோம்; விவசாயம் பண்ணப் போனப்ப ஊர்ல இருக்கிற உயர் சாதிக்காரங்க எல்லாம் ஒண்ணாச் சேர்ந்து வந்து மிரட்டி இருக்காங்க; ஊர்ப் பஞ்சாயத்து அது இதுன்னு கூட்டி எங்க குடும்பத்தையே அசிங்கப்படுத்தி இருக்காங்க...

'நீங்க எல்லாம் விவசாயம் பார்க்கப் போயிட்டா, தோட்டி வேலைய எவண்டா செய்றது? எங்க வீட்டுக் கக்கூஸ்கள் எல்லாம் நாறிக் கெடக்கணுமா...'ன்னு கேட்டிருக்காங்க. என் தங்கச்சி படிச்ச புள்ளயில்லையா? அந்தத் துடுக்குத் தனத்துல உன் நாத்தத்த நீ தான் கழுவணும்னு சொல்லி இருக்கு... இது பெரிய குத்தமா ஸார். அன்னைக்கு ராத்திரியோட ராத்திரியா அந்த உயர்சாதி மிருகப் பயல்கள் எங்க வீட்டுக்குள்ள புகுந்து...'' பேச்சு வராமல் திணறினேன். அருவி மாதிரி கண்ணீர் கொட்டியது.

தனபால் தண்ணீர் வரவழைத்துக் கொடுத்தான். குடித்து விட்டு, விட்ட இடத்தி லிருந்து தொடர்ந்தான். ''என் அக்கா, அம்மா, தங்கச்சி - பதிமூணு வயசு பச்ச மண்ணு ஸார் அது - மூணு பேரையும் மாறி மாறி பலாத்காரம் பண்ணி, தடுக்கப் போன எங்க அண்ணனையும் வெட்டிக் கொன்னுட்டு அப்படியும் ஆத்திரம் தீராம, நாலு பேத்தையும் துண்டு துண்டா வெட்டி நாங்க விவசாயம் பண்ண இருந்த நிலத்துல வீசிட்டுப் போய்ட்டாங்களாம் ஸார்... நான் உடனே போகணும். தயவு பண்ணி என் பாஸ்போர்ட்ட வாங்கிக் குடுங்க ஸார்...''

நரசய்யா, தன் சொந்த நாட்டுக்குப் போவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் துரிதமாகச் செய்து முடித்தான் தனபால்.

நரசய்யா கிளம்பிப் போனதும் தனபாலுக்குள் அந்தக் கேள்வி எழுந்தது - நரசய்யா இனி என்னவாவான்? அவன் குடும்பத்தினர்களை அழித்தவர்களை சட்டத்தின் முன் நிறுத்தி அவர்களுக்கான தண்டனையைப் பெற்றுத்தர போராடுவானா அல்லது உயர்ஜாதி பண்ணையார்களைக் கொன்றொழிக்கும் நக்ஸலைட்டாக மாறுவானா? நரசய்யா எந்த திசை நோக்கி ஓடுவான், நிழல் துரத்த..? ●



## யுத்த பூமி - 1

அவன் அப்படிச் சொன்னதும் எங்களைச் சுமந்து செல்லத் தயாராக இருந்த கார் தேராக மாறிவிட்டது போல், எனக்கும் ஒரு பிரமை ஏற்பட்டது. (போதாக்குறைக்கு காரோட்டி வேறு தன் பெயர் கிருஷ்ணன் என்று குறிப்பிட்டிருந்தார்!)

காரில் ஏறியதும் கையசைத்த உறவினர் வேகமாக எங்களிடம் வந்தார். ''ஒருவேளை நமக்கு வெற்றித் திலகமிடப் போகிறாரோ?'' என்று என் காதைக் கடித்தான் ஜருகண்டி.

இல்லை!

''போய்ட்டு வரும்போது வெளியிலேயே கால்களை அலம்பிண்டு அதுக்கப்புறம்தான் வீட்டுக்குள்ளே நுழையணும். என்ன இருந்தாலும் அது யுத்த பூமி இல்லையா?'' என்றார்!

# குருக்ஷேத்ரம்

## ஆன்மிகப் பயணத்தொடர்

**''போ**ய்ட்டு வர்றோம்'' என்று கிளம்பினோம். உறவினர் கையசைத்தார்.

நாங்கள் போக இருந்த இடம் குருக்ஷேத்ரம்.

நாங்கள் என்பது நான், ராமநாதன் மற்றும் ஜருகண்டி. ராமநாதன் குருக்ஷேத்ரத்துக்கு ஏற்கெனவே பலமுறை வந்தவர். ஜருகண்டிக்கும் எனக்கும் அதுதான் முதல் விஜயம்.

ஜருகண்டி என்ற பெயரைக் கேட்டுத் திகைக்க வேண்டாம். அது காரணப் பெயர். மொட்டையில் கறுப்பு ஓடும் முன்னரே, மீண்டும் திருப்பதிக்கு ஓடும் குடும்பம் அவனுடையது! இரண்டரை வயதாகும் போதே அடிக்கடி ஜருகண்டி ஜருகண்டி என்று குழந்தை சொல்லிக் கொண்டிருந்தானாம். அவனை அப்படியே அவனுடைய அம்மா செல்லமாகக் கூப்பிடத் தொடங்க அது பரவி, நிலைத்துவிட்டது!

''அண்ணா, என் சட்டை திடீர்னு கவசமா மாறிட்டது போல் இருக்கு'' என்றான் ஜருகண்டி.

**ப**ண்டைய இலக்கியங்களில் குறிப்பிடத்தக்கப் புகழைப் பெற்றிருந்தது குருக்ஷேத்ரம்.

குரு என்னும் வம்சத்தினரால் ஆளப்பட்ட பகுதி இது. துவாபர யுகத்தில் இது ஒரு புண்ணியத் தலமாகக் கருதப்பட்டது என்கிறது மத்ஸ்ய புராணம். ஜம்புத்வீபத்தின் (அதாவது இந்திய தீபகற்பத்தின்) பதினாறு முக்கியத் தலங்களில் இதுவும் ஒன்று. மனுவின் பாராட்டுதல்களைப் பெற்ற இடம். புத்தர் இங்கு விஜயம் செய்திருக்கிறார்.

உங்களுக்குத் தெரியுமா? பத்து சீக்கிய குருமார்களில் ஒன்பது பேர் குருக்ஷேத்ரத்துக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். குருநாணக் இங்கு தங்கியிருந்திருக்கிறார். பெரியதொரு குருத்வாராவும் (சீக்கிய ஆலயம்)

இங்கே இருக்கிறது.

இத்தனை மகிமைகள் கொண்டதாக இருந்தாலும், குருக்ஷேத்ரம் என்றவுடன் நம் நினைவுக்கு வருவது ஒன்றுதான். அது ஒரு யுத்த பூமி!

மக்கள் மனதில் அந்த விதத்தில் அழுந்த பதிந்துவிட்டது குருக்ஷேத்ரம். ''சே, எப்பவும் நம்ம வீடு குருக்ஷேத்ரமா இருக்கணுமா?'' என்று நம் வீட்டில் நடக்கும் அன்றாட லடாய்களுக்கு ஒப்புவமை கூற, அந்தத் தர்மயுத்த பூமியை வம்புக்கு இழுக்கவும் துணிந்திருக்கிறோம்.

**ம**காபாரதத்தில் குருக்ஷேத்ரத்துக்கு மிக முக்கியமான இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. வெறும் பதினெட்டே நாட்கள் நடைபெற்ற மகாபாரதப் போர் அதாவது - குருக்ஷேத்ர நிகழ்ச்சிகள் - அந்த நூலில் பாதிக்குப் பாதி இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளன.

**கு**ருக்ஷேத்ரம் எங்கே இருக்கிறது?

டெல்லியில் வடக்குப் பக்கத்தில் இருந்து தொடங்குகிறது தேசிய நெடுஞ்சாலை எண் 1. இது ஹரியானா மற்றும் பஞ்சாப்பில் உள்ள வளமிக்க வயல் வெளிகளில் முடிவடைகிறது. அந்தப் பாதையில் இருந்து பிப்லி என்ற இடத்தில் வேறொரு சாலை பிரிந்து செல்கிறது. அதுதான் குருக்ஷேத்ரத்துடன் தேசிய நெடுஞ்சாலை 1-ஐ (NH01) இணைக்கும் பாதை.

**கா**ர் நின்றது.

''குருக்ஷேத்ரம் வந்துடுச்க'' என்றான் ஜருகண்டி உற்சாகமாக.

கீழே இறங்கினோம்.

''மெய்சிலிர்க்குது'' என்றபடி தன் முன் கையைக் காட்டினார் ராமநாதன். அவரது ரோமங்கள் நெட்டுக்குத்தாக நின்றன.

பிறகு குனிந்து தரையைத் தொட்டு தலையிலும் கண்களிலும் ஒற்றிக் கொண்டார்.

''பலரையும் பரலோகத்துக்கு அனுப்பிய இடம் இது. யாராவது கடுகாட்டைத் தொட்டுக் கண்ணில் ஒத்திப்பாங்களா?'' என்று ஜருகண்டி கேட்க, ராமநாதன் கோபத்துடன் அவனைப் பார்த்தார்.

''வாயை மூடு! சரஸ்வதி நதி பாய்கிற இடம் இது!'' என்றார்.

''என்னவோ போங்க... அலகாபாத்திலே திரிவேணி சங்கமம்ன்னு சொன்னாங்க. ஆனால், கங்கையும் யமுனையும், தானே சங்கமம் ஆகிறது'', என்றான் ஜருகண்டி.

''சரஸ்வதி நதி கீழே இருந்து வந்து கலப்பதாக ஐதீகம்'' என்றார் ராமநாதன்.

**அருணன் சரண்யா**









**மகாபாரதப் போருக்குப் பிறகு சரஸ்வதி நதி பாய்வதாக நம்பப்படுகிற இடத்தில்தான் வேத பாராயணம் நடக்கிறது.**

ஜருகண்டியின் உதடுகளில் ஒரு புன்னகை.

''சந்தேகமே வேணாம்டா. நம்ம வேதங்களிலே எல்லாம் சரஸ்வதி நதியைப் பற்றி விவரமாகக் குறிப்பிட்டிருக்காங்க. அது ரொம்ப புனிதமான நதி. அதோ... அந்த ஒலி உன் காதிலே விழுதா?''

என் காதிலும் தெளிவாக விழுந்தது. வேத கோஷத்தின் சீரான ஒலி.

''மகாபாரதப் போருக்குப் பிறகு சரஸ்வதி நதி தான் பாய்வதை நிறுத்திக் கொண்டது. இப்போது கூட சரஸ்வதி பாய்ந்ததாக நம்பப்படுகிற இடத்திலேதான் வேத பாராயணம் நடக்கிறது.''

எதிர்பாராத விதத்தில் சைக்கிள் ஒன்று தன்மீது இடிப்பதுபோல் வரவே கொஞ்சம் ஒதுங்கினார் ராமநாதன். அந்த சைக்கிள் கேப்பில் ரதம் ஓட்டும் கேள்வியொன்றைக் கேட்டான் ஜருகண்டி:

''ஹஸ்தினாபுரம் என்பது எங்கோ நூற்றுக்கணக்கான கிலோமீட்டர் தள்ளியிருக்கும் ஓர் இடம். அங்கே பக்கத்தில் இருக்கும் இடத்தையெல்லாம் விட்டு விட்டு வந்து இந்தக் குருக்ஷேத்ரத்தில் எதற்காக பாண்டவர்களும் கௌரவர்களும் போரிடணும்?''

அவர் கூறப்போகும் விடைக்கும், குருக்ஷேத்ரத்தின் மண்ணை அவர் முன்பு தொட்டு ஒற்றிக் கொண்டதற்கும் ஏதோ தொடர்பு உண்டு என்று என் உள்ளுணர்வு கூறியது.

*(பயணிக்கலாம்)*

**தர்மயுத்தம் நடப்பதற்காக பாண்டவ-கௌரவர்கள் வகுத்த போர் நெறிமுறைகள்.**

1. சூரியன் உதித்த பிறகுதான் போர் தொடங்க வேண்டும்.
2. சூரியன் மறையும்போது போர் உடனடியாக நிறுத்தப்பட வேண்டும்.
3. பல போர் வீரர்கள் ஒரே சமயத்தில் ஒரு போர் வீரரைத் தாக்கக் கூடாது.
4. வெகுநேரம் இருவர் ஒருவரை யொருவர் தாக்கிக் கொண்டால், அவர்கள் சம ஆயுதம் படைத்தவர்களாக இருக்க வேண்டும்.
5. சரணடைந்த ஒரு போர் வீரரைக் கொல்லக் கூடாது.
6. ஆயுதம் அற்றவரைத் தாக்கக் கூடாது.
7. நினைவிழந்த போர் வீரரைத் தாக்கக் கூடாது.
8. போரில் பங்குபெறாத எவரும் தாக்கப் படக் கூடாது.
9. புறமுதுகிட்டு ஓடும் எவரையும் கொல்லக் கூடாது.
10. பெண்களைத் தாக்கக் கூடாது.
11. அந்தந்த ஆயுதப் பயிற்சிக்குரிய இலக்கணங்களை மீறக் கூடாது.



''பெண்ணைப் பாடச் சொல்லவா!''

''வேண்டாம். நிறைய இடங்களில் பாட்டுக் கேட்டு அலுத்துப் போச்சு... நாலைந்து விளம்பரங்களைச் சொல்லச் சொல்லுங்க!''

— லீலாஜி



''நம்ம தலைவர் உலகப் படத்தை வச்சு அப்படி என்ன தேடுறாரு?''

''புறம்போக்கு நிலம் ஏதாவது இருக்கானு பார்க்குறாரு.''

— எஸ்.விஜயராணி

# உலக



''எத்தனை முறை சொன்னாலும் நீ புரிஞ்சுக்கவே மாட்டியா?''

''ஒருமுறை சொன்னாலே நான் புரிஞ்சுக்கிற மாதிரி நீங்க சொல்லவே மாட்டீங்களா?''

— சிவஞானம்

"பேங்க்ல லட்சக் கணக்கா பணம் இருக்குன்னு மாப்பிள்ளை வீட்டார் சொன்னதை நம்பி பொண்ணு குடுத்துட்டோம்..."

"இப்ப என்னாச்சு?"

"பேங்க்ல பணம் இருக்கு... ஆனா, மாப்பிள்ளை பேர்ல பத்து பைசாகூட இல்லை...!"

— ஜே.தனலட்சுமி






"ஏம்பா! நான் ஒரு குருடன்னு போர்டு போட்டுக்கிட்டு பணம் கேக்கறியே! தப்பில்லே!"

"தப்புதாங்க! நான் குருடன் இல்லே – ஊமை! போர்டுதான் தப்பா எழுதிட்டேன்!"

— மெலட்டூர் விஸ்வநாதன்

# ரேஞ்ச்சுத் தலைவர்!

"அமைச்சரே! நமது நாட்டின் 'குடிமக்கள்' எப்படி இருக்கிறார்கள்?"

"போதையில்தான் மன்னா!"

— சென்னிமலை சி.பி.செந்தில்குமார்



மூளைக்குத் தெரிவது வேறு; அதற்கும் ஆதாரமான உயிருக்குத் தெரிவது வேறு. கோட்டான் கண்ணுக்கு வஸ்துக்கள் ராத்திரியில்தான் தெரிகிறது. பகலில் அதற்கு எதுவும் தெரிவதில்லை. மனுஷக் கண்ணுக்குப் பகலில்தான் தெரிகிறது. ராத்திரியில் தெரிவதில்லை. மூளைக்கு அனுபவம் தெரிவதில்லை. அதற்குத் தர்க்கத்தையொட்டி விசாரிக்கிற அறிவுவாதம்தான் தெரியும். அனுபவம் தெரிகிற இருதயத்துக்கு அறிவுவாதம் தெரிவதில்லை. ஜீவனின் சார சத்யமான உயிரைத்தான் இருதயம் என்பது.

ஆனாலும் இருதயம் லேசில் திறந்து கொள்வதில்லை. எதனாலோ மனுஷ்யர்களுக்கு மூளைப் பெருமையையே பெரிசாக வைத்திருக்கிறது. அதனால், எதுவுமே முதலில் புத்தியில், மூளையில் உறைத்தாக வேண்டியிருக்கிறது. ஹிருதயமே அனுபவிக்கவேண்டிய ஆத்யாத்மிக விஷயங்களைக்கூட மூளை சரியாயிருக்குமா, இருக்காதா என்று எடை போட்டுப் பார்க்க ஆரம்பிக்கிறது. சரியாயிருப்பதாக அது முடிவு பண்ணினால் அதற்கப்புறமேல, 'இப்படி நாம் அறிவினால் முடிவு பண்ணினது போதாது. இதனால் அந்த விஷயத்தின் லக்ஷ்யமான ப்ரயோஜனம் நமக்குக் கிடைத்து விடவில்லை. உதாரணமாக, ஆத்மா சச்சிதாநந்த ஸ்வரூபமாகத்தான் இருக்க வேண்டுமென்று இத்தனை வேதாந்த புஸ்தகங்களைப் படித்து, குரு உபதேசங்களைக் கேட்டு, புத்தியினால் புரிந்து கொண்ட போதிலும் நமக்கு சத்தும் தெரியலை, சித்தும் தெரியலை, ஆனந்தமும் தெரியலை. அசடு மாதிரி துக்கப்பட்டுக் கொண்டுதான் கிடக்கிறோம். அதனால் புத்திக்குள் போனதோடு நிறுத்திக்கொள்ளாமல் அதை இருதயத்துக்குள் இறக்கிக் கொள்ள வேண்டும்' என்று நினைக்கிறோம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# மூளையும்... இதயமும்...



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **“ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்”** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

பழநிபாரதி

# காவல் தேவதை!

மலைகளையும்
பள்ளத்தாக்குகளையும்
கடந்து வந்த காற்று
சிக்கித் தவித்தது
உன் கூந்தலில்

இலைகளோடு
கண்ணாமூச்சி விளையாடிய
மலர்களும் கனிகளும்
ஒளிந்து கொண்டிருந்தன
உனக்குள்

உன் ஆரஞ்சு நிறத்தை
பூசிக் கொண்டு
இளைப்பாறியது
அந்திச் சூரியன்



உன் கால்களில்
ஊர்ந்து உயர்ந்து
மின்னலின் சிறகுகளோடு
நர்த்தனமாடின
மின்மினிகள்

பிரார்த்தனைகள் ஏதுமின்றி
பணிந்தேன் உன்னை

நிலவெரியும் பொழுதில்
நீ என்னை
ஆட்கொண்டாய்

உன் பெருவிரல் தொடங்கி
வரிசையாய்
மழை பொழிந்துகிடந்தன
நட்சத்திரங்கள்



உ

# கேரள நம்பூதிரியின் தேவ பிரசன்ன ஜோதிஷம்



வேதமே ஸ்வாசம்! வேதமே வாழ்க்கை!

பிரும்ம ஸ்ரீ பாலகாடு ஸ்ரீ சூரியன் நம்பூதிரி M.A., D.I.A., அதர்வண வேத சாஸ்திரத்தின் அடிப்படையில் நன்மையே செய்விக்கின்றார். [ கார்யசித்தி - வசீகரம் - துர்சக்தி சம்காரம் சத்ரு விலக்கல் - தாம்பத்ய வசீகரம் - காதல் - திருமணம் கைகூட பார்வதி சுயம்வர ஹோமம் - செய்வினை கோளாறுகளை விலக்கிடுதல் - பிள்ளைகளை பெற்றோர்க்கு வசப்படுத்தல் - சகல [ நவகிரக ] தோஷ பரிகாரங்கள் - அமாவாசை பிரத்யங்கரா [ மிளகாய் ] ஹோமம் - பௌர்ணமியில் மனநிலை சரியில்லாத வர்களுக்கு தன்வந்த்ரி [ சாந்தி ] ஹோமம் - பகவதி பூஜை செய்விக்கின்றார்.

முன் அனுமதியுடன் கூடிய கடித நேரிடை - தொடர்பிற்கு

## ஸ்ரீ சாஸ்தா ஜோதிஷாலயா

140/45, சுப்பிரமண்ய முதலி தெரு, சைதாப்பேட்டை, சென்னை - 600 015.

☎ - 91-044-65171890 / (0)9840102001/ (0)9884943309 / www.namboodrijothisham.com

(வெளியூர் அன்பர்கள் கடித ஆலோசனை பெற ஜாதக நகல் / தங்களது பிரச்சினைகளை தெளிவாக எழுதி ரூபாய் [illegible]க்கான M.O / D.D. யுடன் சுய முகவரி எழுதிய கவருடன், [illegible] ஒட்டப்பட்ட கவருடன் தொடர்பு கொள்ளவும்)

---



# Saicharan

PEACE RESORT

# சாய் சரண்

அமைதி வாசஸ்தலம்



ஒருவரது வாழ்நாளின் இறுதி நாட்களில் அவர்க்கு தேவைப்படும் ஆதரவும், இன்முகமும், பாசமும், கொண்ட சேவை மற்றும் பணிவிடையை செய்து அவரது நிம்மதியான வாழ்வு முடிவுக்கும், அமைதிக்கும் அவரது ஆத்மா சாந்தியடையவும் மனித குலத்திற்கு சேவையாற்றிட உண்டாக்கப்பட்டது. 'சாய் சரண்' வாசஸ்தலம்

அத்தகைய பெரியோர்கள், வயதான தம்பதியர்கள் மற்றும் நன்கொடை அளிப்பவர்கள் அணுகவும்

## சாய்சரண் டிரஸ்ட்

43, தெற்குமாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4

செல் : 9840753990 - போன் : 64538545



# சனிப் பெயர்ச்சி

தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** இந்த வருடம் சனிபகவான் கடகராசியிலிருந்து சிம்ம ராசிக்கு இடப் பெயர்ச்சி ஆகிறார். இதுநாள் வரை 4-ம் இடத்தில் சஞ்சாரம் செய்த சனிபகவான், உங்களுக்குப் பலவிதமான சோதனை களையும், துன்பங்களையும் அளித்தார். ஆனால், தற்போது 5-ம் இடத்தில் சஞ் சாரம் செய்வதால் பல நற்பலன்களைச் செய்யப் போகிறார். பூர்வீகச் சொத்து வழியில் இருந்து வந்த தொல்லை களைப் போக்குவார். சிலருக்கு மகப் பேறு பாக்கியத்தை அளிப்பார். உத்தி யோகத்தில் இடமாற்றத்தைத் தருவார். பணப் பற்றாக் குறையைப் போக்குவார். கல்வி வளம் மேலோங்கும். கலைஞர் களுக்கு நல்ல விருதுகள் கிடைக்கச் செய்வார். மனைவி வழியில் சொத்துகள் கிடைக்கும். பங்கு மார்க்கெட் நல்ல இலாபம் தரும். பெண்களுக்கு உடல் நல தொல்லைகள் தீரும். குடும்ப வாழ்வில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். அரசியல்வாதிகளுக்குப் பதவி கிட்டும். சனிக்கிழமைதோறும் சனீஸ்வர பகவானுக்குத் தீபம் ஏற்றிவர நற்பலன் கிட்டும்.

**ரிஷபம்:** சனிபகவான் 3-ம் இடத்திலிருந்து 4-ம் இடத்துக்கு போகிறார். 4-ம் இடம் என்பது சுகம், வீடு, தொழில் போன்ற வற்றைக் குறிக்கும். 4-ம் இடத்து சனி என்றால் அர்த்தாஷ்டம சனி என்று சொல்வார்கள். அர்த்தாஷ் டம சனி என்றவுடன் பயப்படத் தேவையில்லை. எல்லோருக்கும் அர்த்தாஷ்டம சனி கெடுதல் செய் யாது. இது அனுபவபூர்வ உண்மை யாகும். சனி பகவான் வந்திருக்கும் இடம் தொழில் ஸ்தானமாக விளங்குவதால் முதலில் தொழில் அபிவி ருத்தி, வியாபாரத்தில் அபரிமிதமான லாபம் ஈட்டச் செய்வார். ஆரோக்கியத்தில் முன் னேற்றமான சூழ்நிலை உண்டாகும். சில ருக்கு வீடு / மனை வாங்கக்கூடிய சூழ் நிலை ஏற்படுத்துவார். பதவி உயர்வு இட மாற்றம் அளிப்பார். கல்வி வளம் மேம்படச் செய்வார். வழக்கு வெற்றி பெறச் செய்வார். கடன் தொல்லைகளை விலக்குவார். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக் கும். சிலருக்குக் கர்மபாவம் வந்து சேரும். ஆதலால், ஆஞ்சநேயரை சனிக்கிழமை தோறும் துளசி மாலை சாற்றி தீபம் ஏற்றி வர கஷ்டங்கள் விலகி நற்பலனை அடை வீர்கள்.

**மிதுனம்:** சனிபகவான் 2-ம் இடத்தி

# பலன்கள்!

விருந்து 3-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 3-ம் இடம் என்பது தைரியம், தன்னம்பிக்கை, வெற்றி, காரிய ஸ்தானம் சகோதர ஸ்தானம், போட்டி போன்றவற்றைக் குறிக்கும். 3-ல் சனி வருவது கடந்த காலத்தில் 7½ சனியின் பிடியிலிருந்து விலகி நற்பலனை அளிக்கும் இடமாகும். உடன் பிறப்புகளால் அனுகூலம் ஏற்படும். முயற்சிக்கும் காரியத்தில் வெற்றி கிட்டும். தந்தை வழியில் சொத்துகள் வந்துசேரும். புண்ணிய காரியத்தில் ஈடுபட்டுச் சாதனை படைப்பீர்கள். மனச்சோர்வு விலகும். வேலையில் நற்பெயர் கிட்டும். சிலருக்கு இடமாற்றம், பதவி உயர்வு வந்து சேரும். அரசியல்வாதிகளுக்குப் பொற்காலம். மாணவ மாணவிகளுக்கு நல்ல மதிப்பெண் கிட்டும். திருமணம் கைகூடும். வெளியூர் பிரயாணம் வந்து சேரும். வியாழன் தோறும் குரு பகவானை வணங்கி வர நற்பெயர் கிட்டும்.

**கடகம்:** இதுநாள் வரை ஜென்ம சனியின் பிடியில் இருந்த நீங்கள், தற்பொழுது பாத சனியில் வந்துள்ளீர்கள். அதாவது ராசிக்கு 2-வது இடமாகும். பாத சனியைப் பற்றி கவலைபடாதீர்கள். கடந்த ஐந்து வருடங்களாகக் கஷ்டப்பட்ட உங்களுக்குக் கடைசி இரண்டரை வருடங்கள் பொன்னும் பொருளும் வந்து சேரும். சும்மா இருந்தாலும் பணம் தேடி வரும். 'சிலருக்கு மகப்பேறு பாக்கியம் கிட்டும். வருமானம் அதிகரிக்கும். தொழில் ரீதியில் முடங்கிக் கிடக்கும் பணம் கைக்கு வந்து சேரும். கல்வி வளம் மேலோங்கும். மனைவி வழியில் லாபம் கிட்டும். உடல் ஆரோக்கியம் சீராகும். எதிர்ப்புத் தொல்லை நீங்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். கூட்டுக் குடும்பத்தை விட்டு தனிக் குடித்தனம் செல்ல நேரிடும். மாணவ / மாணவியர் கல்வியில் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். சனிக்கிழமை தோறும் சனிபகவானுக்குத் தீபம் ஏற்றிவர, கஷ்டங்கள் விலகும். ராகு / கேது வழிபாடு செய்துவர நல்லது நடக்கும்.

**சிம்மம்:** இதுநாள் வரை 7½ சனியில் விரய சனியில் இருந்து வந்த உங்களுக்கு, இனி விரய சனி விலகி ஜென்ம சனியின் சஞ்சாரம் ஆரம்பிக்கிறது. ஜென்ம சனி என்றவுடனே கவலைப்படத் தேவையில்லை. ஜென்ம ராசியில் சனி பகவான் சஞ்சாரம் செய்வதை, ஜென்ம சனி என்று சொல்வார்கள். ஜென்ம சனி வரும்போது பல லட்சங்கள் சம்பாதிக்கும் யோகம் வரும். நீண்ட தூரம் சென்று பணம் ஈட்டும் வாய்ப்பு ஏற்படும். கடந்த காலத்தில் ஏற்பட்ட விரயம் இனி இருக்காது. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனக் குழப்பம் விலகும். கணவன் / மனைவி உறவு நன்றாக இருக்கும். தன்னம்பிக்கை மிகுந்து காணப்படும். கடன் தொல்லை நீங்கும். வாக்குவன்மை மேலோங்கும். மகான்களின் தரிசனம் கிட்டும். சிலருக்கு வீடு / மனை வாங்கும் யோகம் வந்து சேரும். அநாவசியமான செலவுகள் ஏற்படாது. மனதில் சோர்வு நீங்கி உற்சாகம் ஏற்படும். சனிபகவான் அருட்பார்வை நன்றாக இருக்கும். அச்சுத் துறையில் உள்ளவர்கள் மிகுந்த பலனை அடைவார்கள். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**கன்னி:** சனிபகவான் 12-ல் சஞ்சாரம் செய்யப் போகிறார். 12-ம் இடம் என்பது விரைய ஸ்தானம் என்பதால், எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. சிலருக்குப் பிரயாண செலவு ஏற்படும். சிலருக்கு வைத்திய செலவு ஏற்படும். சிலருக்கு சுப செலவு வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். எதிர்ப்புத் தொல்லை நீங்கும். புண்ணிய ஸ்தலம் சென்று மகான்களை தரிசிக்க நேரிடும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் செய்பவர்கள் நற்பலனை அடைவார்கள். கலைஞர்களுக்கு முன்னேற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வில் சோதனைகள் விலகி சாதனைகள் படைப்பீர்கள். மாணவ /

மாணவியர் நல்ல மதிப்பெண்கள் பெறு வார்கள். அச்சுத்துறை தொழில் லாபம் தரும். சனிக்கிழமைதோறும் சனீஸ்வர பக வானுக்கு விளக்கு ஏற்றி சுற்றி வர, நல்லது நடக்கும். வியாழன் தோறும் குரு ப்ரீதி செய்து வரவும். கஷ்டங்கள் விலகி நன்மை பிறக்கும்.

**துலாம்:** இதுநாள் வரை 10-ம் இடத்தில் சஞ்சாரம் செய்த சனி தற்போது 11-ம் இடத்தில் சஞ்சாரம் செய்யப் போகிறார். 11-ம் இடம் என்பது லாபஸ்தானம் என்ப தாகும். லாபஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வ தால் தொழில் வளம் ஆதாயத்தை அளிக்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மறைமுக எதிர்ப்புத் தொல்லை விலகும். கடன் சுமை குறையும். பூர்வீகச் சொத்துகள் வந்து சேரும். நண்பர்கள் உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். கூட்டுத்தொழில் மூலம் ஆதாயம் ஏற்படும். பத்திரிகைத் துறையில் உள்ளவர்களுக்கு நற்பெயர் கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். ஏற்றுமதி, இறக்குமதி தொழில் லாபகரமாக இயங்கும். ராகு / கேது வழிபாடு நற்பல னைத் தரும்.

**விருச்சிகம்:** இதுநாள் வரை சனிபகவான் 9-ம் இடத்தில் சஞ்சாரம் செய்தவர், தற்போது 10-ம் இடத்தில் சஞ்சாரம் செய்யப் போகிறார். பத்தாம் இடம் என்பது ஜீவன ஸ்தானம் ஆகும். வேலை, கர்மம், பதவி, பட்டம், புகழ் போன்றவற்றைக் குறிக்கும் இடம் ஆகும். 10ம் இடத்துச் சனி நல்ல பதவி உயர்வுக்கு வழிகாட்டு வார். குடும்ப உறவு நன்றாக இருக் கும். வீடு / மனை வாங்கும் யோகம் ஏற்படும். ஆடை, ஆபர ணங்கள் வந்து சேரும். மாணவ / மாணவியர் படிப்பில் சிறந்து விளங்குவர். அரசியல்வாதிகள் பதவியில் அமர்வார்கள். கொடுக் கல் வாங்கல் நன்றாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். சனிக்கிழமை தோறும் சனீஸ்வரருக்கு தீபம் ஏற்றி சனி காயத்ரி படித்துவர கஷ்டங்கள் விலகி நல்லது நடக்கும்.



**தனுசு:** இதுநாள்வரை ராசிக்கு 8-ல் சனி சஞ்சாரம் செய்து வந்தார். அதனால் பல சோதனைகளுக்கு ஆளானீர்கள். இனிமேல் கவலைப்படத் தேவையில்லை. தற்பொழுது 9-ம் இடத்தில் சஞ்சாரம் செய்யப் போகிறார். 9-ம் இடம் என்பது பாக்கிய ஸ்தானம், தெய்வீக ஸ்தானம். தர்ம ஸ்தானம் என்பதா கும். ஆதலால் எடுத்த எடுப்பிலே நல்லது செய்யத் துவங்கிவிடும். பண விருத்தி, மேல் படிப்பில் வெற்றி, மகான்களின் தரிசனம் போன்றவை கிட்டும். உடன் பிறப்புகளால் பலன் ஏற்படும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். நீண்டகால கடன் தொல்லைகள் விலகும். கல்வி வளம் மேலோங்கும். வியா பாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். ஊதிய உயர்வு ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். உடல் ஆரோக்கி யம் நன்றாக இருக்கும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் சிறப்பாக இயங்கும். அரசியல் வாதிகள் நல்ல பலனை அடைவார்கள். கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். வெளி நாடு செல்ல வாய்ப்பு கூடிவரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கோவில் திருப்பணிகள் சிறக்க உதவுவீர்கள். தான தர்மம் செய்யும் அளவுக்குப் பணம் வந்து சேரும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் மிகுந்து காணும்.

**மகரம்:** இதுநாள் வரை சனிபகவான் 7-ம் இடத்தில் சஞ்சாரம் செய்தார். இனிமேல் 8-ம் இடத்தில் சஞ்சாரம் செய்யப்போகிறார். 8-ம் இடம் என்று சொன்னவுடன் பயப்படத் தேவை இல்லை. எட்டில் சனி வந்தால் கெட்டது குடி என்று பொதுவாகச் சிலர் சொல்வார்கள். அப்படி எல்லோருக்கும் நேரிடாது. சனிபகவான் ராசி நேயர்களுக்கு ராசிக்கு அதிபதி என்பதால் எந்தவித கெடு தலும் செய்ய மாட்டார். கெட்டவன் 8-ல் இருந்தால் கிட்டிடும் ராஜயோகம் என்பது வாக்கு. அதன்படி பார்த்தால் இந்த சனிபக வான் இவர்களுக்கு நல்லதைச் செய்வார் என்பது ஜோதிட ரீதியாகத் தெளிவாகப் புரிகிறது. கடன் தொல்லை விலகும். வழக்கு

டக்குமென்பார்; நடக்கும் • நடக்குமென்பார்; நடக்கும் • நடக்குமென்ப

வெற்றி அளிக்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். உடல் நிலை சீராகும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். குடும்ப வாழ்வில் இணக்க மான சூழ்நிலை உருவாகும். குழந்தைகள் வழியில் மனமகிழ்ச்சி ஏற்படும். உத்தி யோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற் படும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வியாபாரத்தில் ஏற்றமான சூழ் நிலை உண்டாகும். மனைவியின் உடல் நிலை சற்று பாதிக்கும். அசையா சொத்து கள் வாங்க நேரிடும். சனிக் கிழமை தோறும் ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர நற்பலன் ஏற்படும்.



**கும்பம்:** இதுநாள் வரை சனிபகவான் 6-ம் இடத்தில் சஞ்சாரம் செய்தார். இனிமேல் 7-ம் இடத்தில் சஞ்சாரம் செய்யப் போகிறார். 7-ம் இடம் என்பது களத்திர ஸ்தானம் ஆகும். ராசிக்கு 7-ல் இருந்து தன் ராசியைப் பார்த்து நற் பலனை அளிக்கும். சனி பகவான் ராசிக்கு 7-ல் சனி கேதுவுடன் சேர்க்கைப் பெற்று இருப்பது கணவன் - மனைவிக்குள் இருந்த கருத்து வேறுபாடு விலகி ஒன்றாக இணைந்து வாழ வழி வகுக்கும். தந்தை வழி சொத்துக்கள் வந்து சேரும். தான தர்மம் செய்யும் சூழ்நிலை உருவாகும். ராசிக்கு 4-ல் இருந்த பார்வை தொழிலில் இடமாற்றம், ஊதிய உயர்வு ஏற்படும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். வீடு / மனை வாங்க உகந்த நேரம். தடைகள் விலகி திருமணம் நடக்கும். நீண்ட காலம் வராத பணம் கைக்கு வந்து சேரும். பங்கு மார்க்கெட் சிறந்து விளங்கும். புதிய தொழில் துவங்க ஏற்ற நேரம். சனிக்கிழமை தோறும் சனீஸ்வரனை வலம் வந்து சனி காயத்ரி படித்து வர நற்பலன் மிகுந்து கைகூடும்.

**மீனம்:** சனிபகவான் 5-ம் இடத்திலிருந்து 6-ம் இடத்துக்கு இடம் மாறிச் செல்கிறார். 6-ம் இடம் என்பது கடன், பிணி, வழக்கு போன்றவற்றை குறிக்கும் இடம். ஆனால் இதற்கு மாறாக பலதனைத் தரப் போகிறார். இந்த சனி மாற்றத்தால் பட்டம், பதவி, புகழ், தேடி வரும். உத்தியோகத்தில் உயர்வு கிட்டும். பண வருவாய் மிகுதி ஆகும். கடன் தொல்லை தீரும். வீடு / மனை வாங்க நேரிடும். வழக்கு வெற்றி அளிக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். மறைமுக எதிர்ப்பு நீங்கும். குழந்தைகள் வழியில் சுபசெலவு ஏற்படும். மன தைரியம், தன்னம்பிக்கை மிகுந்து காணும். கௌரவ பதவி வந்து சேரும். நண்பர் உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் நல்ல பலனைத் தரும். கலைஞர்கள் புத்துணர்ச்சி பெறுவார்கள். சமுதாயப் பணியில் ஈடுபட்டு நற்பெயர் பெறுவீர்கள். மனக் கவலை தீரும். எதிரிகள் சரண் அடையும் காலம் இது. அரசியல் பிரமுகர்கள் உயரிய பதவி பெறு வார்கள். உறவினர்கள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். எதிர்பாராத பிரயாணம் வந்து சேரும். மனப் பிரம்மை தீரும். பொருளாதார கஷ்டம் இருக்காது. பரி காரம் தேவை இல்லை.

நடக்கும் • நடக்குமென்பார்; நடக்கும் • நடக்குமென்பார்; நடக்கும் • நட



● லார்ட்ஸ் கிரிக்கெட் மேட்ச் தினமும் பின்னிரவு பன்னிரண்டு மணி வாக்கில் தான் முடிவு பெறுகிறது. என்.டி.டி.வி யிலும், சி.என்.என்.ஐ.பி.என் சேனலிலும் அந்த அகால நேரத்திலும் நடந்து முடிந்த ஆட்டம் பற்றி விவாதித்தார்கள். சித்துவும் ஸ்ரீகாந்தும் இரவு தூக்கத்தைத் தொலைத்து விட்டுத் தீர்ப்பு வழங்கினார்கள்; பலே! இங்கே தமிழ் சேனல்கள் இருபத்து நான்கு மணி நேரமும் இயங்குவதாகக் காட்டிக் கொண்டாலும், அவை இரவு பத்து - பதி னோரு மணிக்கு மேல் பேருக்குத்தான் இயங்குகின்றன. இதுதவிர தமிழில் இது வரைக்கும் உருப்படியான விளையாட்டு நிகழ்ச்சி என்று ஒன்றுகூட ஒளிபரப்பானது கிடையாது. விஜய் டீ.வி இந்த விஷயத் திலும் சன் டீ.வியை முந்தப் போவதை எல்லோரும் பார்க்கத்தான் போகிறோம்.

● இந்த வருடம் ஆஸ்திரேலியா மற் றும் பாகிஸ்தான் அணிகள் இந்தியா வரு கின்றன. ஆஸ்திரேலியா ஏழு ஒருநாள் போட்டிகளிலும் பாகிஸ்தான் மூன்று டெஸ்ட் மற்றும் ஐந்து ஒருநாள் போட்டி களிலும் விளையாட இருக்கின்றன. டில்லி, மும்பை, பெங்களூரு, ஹைதராபாத், மொகலி போன்ற நகரங்களுக்கு ஒவ்வொரு சீரியஸிலும் கட்டாயம் ஒரு மேட்சாவது வழங்கப்படுகிறது. சதாசர்வ காலமும் சென்னையைத்தான் தொங்கலில் விட்டு விடுகிறார்கள். சென்னையில் சில ஆட் டங்கள் மழையால் தடைபட்டிருக்கலாம். அதற்காக சென்னையை ஒரேடியாக ஓரங் கட்டுவதைப் பார்த்துக்கொண்டு ஏன் டி.என்.சி.ஏ அசிரத்தையாக இருக்கிறது? ஒருவேளை அதிர்ஷ்டம் இல்லாத மைதா னம் என்று சேப்பாக்கத்தைப் பறைசாற்றி விட்டார்களோ?

எட்டு வருடங்களுக்கு முன்பு சென்னை ரசிகர்களை, பாகிஸ்தான் அணி வானளாவப் புகழ்ந்த பிறகு ஒரு பாகிஸ் தானுடனான மேட்ச்கூட சென்னைக்கு ஒதுக்கவில்லை. இந்தக் கோலத்தில் இப் போது சென்னைக்குப் புது ஸ்டேடியம்

ச.ந.கண்ணன்






கட்டப் போகிறார்களாம். தமிழக அரசு வேண்டிய நிலத்தை வாரி வழங்கியிருக்கிறது.

● சமீபத்தில் தமிழக நீச்சல் வீரர்கள் தமிழக அரசிடம் சில கோரிக் கைகளை வைத்தனர். அதாவது பயிற்சி பெறுவதற்கே தேவையான நீச்சல் குளங்கள் சென்னையில் இல்லை என்று. என்னதான் நீச்சல் கற்றுக் கொண்டவர்களா

# அநாதையாக சென்னை!



னாலும் அடிப்படை தேவைகளுக்குக்கூட எதிர்நீச்சல் போட வேண்டியிருக்கிறது.

● எந்த நாட்டுக்கு வேண்டுமானாலும் கிரிக்கெட் ஆடச் செல்லலாம். ஆனால், இங்கிலாந்தில் மட்டும் கூடவே கூடாது. அதிகக் கவனம் கிடைக்கும் ஒரு நாடு. ரும் போட்டு கிரிக்கெட் பற்றி விவாதிப் பார்கள். இப்போது இந்தியக் கிரிக்கெட் டின் கடவுள்களாக ரசிகர்களும் மீடியாவும் போற்றிப் பாடிய சச்சின், டிராவிட், கங்கூலி, லக்ஷ்மண் ஆகிய நால்வரையும் திட்டிக் கொண்டிருக் கிறார்கள். இன்னும் எவ்வளவு நாட்களுக் குத்தான் சச்சின், டிராவிட், கங்கூலி, லக்ஷ்மண் ஆகியோரை வைத்து இந்தியா அல்லாடப்போகிறது என்கிறார்கள். அடுத்த இங்கிலாந்தது டூர் 2011ல்தான். அப்போது சச்சினை கமேண் டேட்டராகப் பார்க்க நேரிட்டாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

● வெங்கடாஜலபதி பாலாஜியை ஒரு கணமும் நினைக்காமல் யாரும் இருப்ப தில்லை. ஆனால், லக்ஷ்மிபதி பாலாஜியை தான் எல்லோரும் மறந்து விட்டோம். காயம் காரணமாக இரண்டு வருடங் களாக கிரிக்கெட்டை விட்டு ஒதுங்கி யிருக்கிறார். 2005 ஆகஸ்டில் ஒருநாள் மேட்ச் ஆடினார். அதன் பிறகு அவரைப் பற்றிய மருத்துவச் செய்திகள்தான் வெளிவந்து கொண்டிருக்கின்றன. கடந்த பிப்ரவரி மாதம் காயத்தைச் சரி செய்ய ஆஸ்திரேலியா சென்றார். இன்று வரை ஒரு தகவலும் இல்லை. பாலாஜி மீண்டு வந்து மீண்டும் இந்திய அணி யில் இடம் பிடிப்பது என்பது அவர் புது பௌலராக அணிக்குள் நுழைந்து விடவும், கடினமானதாக இருக்கும் போலிருக்கிறது. பாலாஜியை அந்தப் பாலாஜிதான் சீக்கிரம் மைதானத்துக்குக் கொண்டுவர வேண்டும். ○



*ஹலோ வாசகர்களே!*
*இதோ நாங்க ரிசீவரை*
*கையில எடுத்தாச்சு!*
*சொல்லுங்க உங்க கருத்துகளை..*

ஸ்பெஷல் ஷொட்டு : குகை மா. புகழேந்தி கவிதைக்கும், வையவனின் 'உறைந்த முகம்' சிறுகதைக்கும்.

ரெகுலர் ஷொட்டு : தராசுக்கும், உலகம் இவ்வளவுதான் பகுதிக்கும். திபெத் தலாய்லாமா பற்றிச் சொல்லியிருந்த விஷயம் இதுவரைக்கும் கேள்விப்படாத விஷயமா இருந்தது.

ஸ்பெஷல் குட்டு : சட்டுன்னு சொல்ற மாதிரி எதுவுமில்லே.

ரெகுலர் குட்டு : சினிமா செய்திகள் மற்ற பத்திரிகை மாதிரி சாதாரணமா இருக்கு. அந்த மாதிரி செய்தி தேவையில்லை.

**இரா. இராஜேந்திரன்**
மயிலாடுதுறை.

# அந்தரங்கமா போய்டாதீங்க பாஸ்!



| | | |
|---|---|---|
| இந்த வாரம் பிடிச்சது | : | அட்டைப்படம், இல. கணேசனின் இனிப்புச் செய்தி கட்டுரை. |
| எப்பவும் பிடிச்சது | : | அருள்வாக்கு, ஜோக்ஸ். |
| பொதுவா பிடிக்காதது | : | சினிமா! ஏன்னா எனக்கு அதுல ஆர்வமில்லை. |
| கல்கியைப் பற்றி ஒரே வரியில் சொல்லணும்னா | : | உண்மையான குடும்பப் பத்திரிகை. |

**ஜெயந்தி சிவகுமார்**
ஏற்காடு.



**பி. சிவஞானம்**
ஒசூர்.

கல்கி படிப்பது :
ஐந்து வருடங்களாக...

ரசிப்பது :
ஜோக்ஸ், வாரம் ஒரு பாசுரம்...

எதிர்பார்ப்பது :
தன்னம்பிக்கைத் தொடர்.

தேவை :
வடிவமைப்பில் இன்னும் கலர்ஃபுல்.

கல்கி பற்றி ஒரே வார்த்தையில் :
திருப்தி.



**ஜி. குப்புசாமி**
சங்கராபுரம்.

கல்கியை வாங்கினதும் படிக்கறது?
தராசு பதில்கள்.

காரணம்?
தைரியமான கண்டிப்பு, நடுநிலை.

சினிமா செய்திகளை எந்த மாதிரி எதிர்பார்க்கறீங்க?
சுவாரஸ்யமா இருக்கணும். டீசன்ட்டா இருக்கணும்.

புதிதா தொடங்கப் போகிற கிளைச்சாலைப் பற்றி...?
நல்ல விஷயம். ஆனா, ரொம்ப
அந்தரங்கமா போய்டாதீங்க பாஸ்!





# அம்மாவின் அக்கறை!

''அம்மா! இன்னிக்கு ஸ்கூல்ல ரன்னிங் ரேஸ் நடந்துச்சு; நான்தான் ஃபர்ஸ்ட்!''

உற்சாகம் கொப்பளித்தது ராகுலின் குரலில்.

''அப்புறம்...'' சட்டென இடைமறித்தாள் பார்கவி. ''ராகுல் முதல்ல கை கால் முகம் கழுவிட்டு வா! பால் குடிச்சிட்டு டியூஷனுக்குக் கிளம்பற வழியப் பார்'' கண்டிப்பான குரலில் கூறிவிட்டு இரவு சமையலை கவனிக்கச் சென்றாள்.

ஏழு மணி. 'ஆனந்தமாய்' சீரியலில் மூழ்கியிருந்தாள் பார்கவி. அப்போதுதான் டியூஷன் முடிந்து வீட்டுக்குத் திரும்பியிருந்தான் ராகுல்.

''அம்மா! இன்னிக்கு நான் புதுசா ஒரு டிராயிங் போட்டேன். எங்க மிஸ்ஸூம் ஃப்ரெண்ட்ஸூம் சூப்பரா இருக்குன்னு சொன்னாங்க. நீயும் பாரும்மா.''

அவன் ஆசையாய் நீட்டியதைக் கையில் வாங்காமல் ''அப்படி வெச்சிட்டுப் போ! அப்புறம் பாக்கறேன்'' என்றாள் டி.வி.யிலிருந்து கண்களை எடுக்காமல்.

ராகுல் ஏமாற்றத்துடன் அங்கிருந்து நகர்ந்தான். சிறிது நேரம் கழித்து ''அம்மா பசிக்குது; சாதம் போடும்மா...'' என்று அவள் முன் வந்து நின்றான் .

''டேபிள் மேல தான் எல்லாத்தையும் எடுத்து வச்சிருக்கேன்ல. நீயே போட்டுச் சாப்பிட்டுக்க'' என்றாள் எரிச்சலுடன்.

''எனக்கு ரெண்டு அப்பளம் பொரிச்சுத் தாம்மா, ப்ளீஸ்!''

''ஊறுகாய் தொட்டு சாப்பிடுடா. ரொம்ப இன்ட்ரஸ்டிங்கான ஸீன்! என்னை நிம்மதியா சீரியல் பாக்க விட்டுத்தொலை...'' அதட்டல் போட்டு அவனை நகர்த்தினாள்.

எட்டு மணிக்கு வேறு சேனல் மாற்றி பார்க்கத் தொடங்கினாள். கன்னத்தில் கை வைத்தபடி சுவாரஸ்யமாக 'அஞ்சலி'யில் ஆழ்ந்திருந்தவளின் தோள் தொட்டு உசுப்பினான் ராகுல்.

''ச்சே! உன்னோட ஒரே தொல்லையாப் போச்சு!'' சீறினாள் பார்கவி.

''உனக்கு ஏற்கெனவே அல்சர் இருக்கு. நீ கரெக்ட் டயத்துக்குச் சாப்பிடணும்னு டாக்டர் சொல்லியிருக்காரில்ல... அப்பா வேற ஊர்ல இல்ல. நாந்தானே உன்னை அக்கறையாப் பார்த்துக்கணும். சாப்பாடு போட்டு எடுத்துட்டு வந்திருக்கேன். சாப்பிடும்மா...'' என்றவாறு தட்டை நீட்டினான் ஒன்பது வயது ராகுல்.

கண்களில் நீர் மல்க மகனை வாரி அணைத்துக்கொண்டாள் பார்கவி.

**ஆர்.லட்சுமி**

# வாருங்கள் வாசகர்களே...

அமரர் கல்கியின் தொடர் குறித்த அறிவிப்பு வெளியான நாளிலிருந்தே பூச்செண்டுகளைக் கடிதங்களாக அனுப்பத் தொடங்கிய வாசகர்களுக்கு நன்றி!

கல்கியின் தொடரை வெளியிடுவதே எங்களுக்கு மிகப் பெரிய பரிசுதான். இதில் பரிசுகள் வேறா? என்று உங்களில் பலர் குறிப்பிட்டுள்ளீர்கள். ஆம்! உங்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியைக் கொடுப்பதென முடிவு செய்துள்ளோம். கல்கியின் நீண்ட கால வாசகர்கள், புதிய வாசகர்கள், இளைஞர்கள், பெண்கள் என அனைவருக்கும் போட்டியுண்டு!

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் பார்த்திபன் கனவு தொடர்கதை, பிரபலங்களின் பேட்டி, வாசகர் பங்கேற்பு என மூன்று பகுதிகளையும் கவனமாகப் படிப்பதே! ஒவ்வொரு நான்காவது வார முடிவிலும் போட்டி வெளியிடப்படும். முடிவுகளைத் தேர்ந்தெடுக்கப்போவது பிரபலங்கள்! கலந்து கொள்ளுங்கள்; பரிசுகளை வெல்லுங்கள்.

## ஆரத்தி எடுத்த வாசகர்கள்!

'**பா**ர்த்திபன் கனவு' சரித்திர நாவல் மீண்டும் கல்கியில் வெளிவரப் போவதை கண்டு பூரித்துப் போயுள்ளேன். எத்தனை முறை வாசித்தாலும் தெவிட்டாத தேனமுது நாவல்.

**- சிம்மவாஹினி (டி.ஜி.நாராயணராவ்) சென்னை**

**கா**லத்தால் அழிக்க முடியாத காவிய நாவலைப் படிக்கத் தயாராகிவிட்டேன். கரும்பு தின்ன கூலியாக பரிசு வேறு உண்டு என்ற அறிவிப்பு எனது ஆவலை மேலும் தூண்டிவிட்டது!

**- என்.சுந்தர், கும்பகோணம்**

**க**ல்கியினால் படைக்கப்பட்ட அவதாரப் புருஷர்களை மீண்டும் புதிய சித்திரங்களில் காண வேண்டும் என்ற எங்களது கனவை நிறைவேற்றியிருக்கிறீர்கள்.

**- வே.ந.கதிர்வேல், வேலூர்**

**வி**க்கிரமன், குந்தவி, சிவனடியார், பொன்னன், வள்ளி, மாரப்ப பூபதி இவர்களை எல்லாம் மீண்டும் சந்திக்கப் போகிறோம் என்பதை நினைக்கும்போதே உள்ளத்தில் சிலிர்ப்பு.

**- டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்**

## கனவின் நுழைவாயில்...

**வா**சிப்பு என்பது ஓர் அற்புதமான அனுபவம். அதில் நமது கற்பனைக்கு எல்லையற்ற சுதந்திரம் கிடைக்கும்.

எனக்கு நான்கு வயது மூத்தவர் என் அண்ணன். தாம் படிக்கிற கதைப் புத்தகங்களை எல்லாம் எனக்குத் தருவார். அவை எனது கற்பனைப் பசிக்குச் சிறந்த ஆகாரங்களாக இருந்தன. அவற்றில் என்னை அதிகம் கவர்ந்தவை வரலாற்று நூல்கள்.

சரித்திரம், தத்துவம், விஞ்ஞானம் - இவை மூன்றும் கலந்ததுதான் கிரியேட்டிவிட்டி. இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் மூன்றும் அர்த்தத்தோடு இணையும் படைப்புகள் மிகச் சிறந்த வெற்றியைப் பெற்றுள்ளன. அண்ணன் மூலம் எனக்கு அறிமுகமான வெற்றி எழுத்தாளர்தான் கல்கி. அவரே எனக்கும் ஆதர்ச எழுத்தாளரும் ஆனார்.

கல்கி என்றதுமே நினைவுக்கு வருவது காரணம்.

**நா**ன் பாட்டனி ஸ்டூடண்ட். ஆனால் சரித்திரத்துடனான என் பயணம் ஒரு பக்கம் தொடர்ந்து கொண்டேயிருந்தது. மதுரை காந்தி மியூஸியத்தில் சரித்திர காலத்தில் உபயோகப்படுத்திய ஆடைகள், மண்பாண்டப் பொருட்கள், சித்திரங்கள் ஆகியவற்றை மிக ஆவலுடன் கவனித்துள்ளேன். எல்லாவற்றுக்கும் மேலாக வாள்கள், சிறிய குத்துக் கத்திகள் என்னை அதிகமாக கவரும். மனத்துக்குள் திரைக் காட்சிகள் விரிந்து, வாள்கள் மோதிக் கொள்கிற ஓசை கேட்கும். அங்குள்ள சித்திரங்கள், சிற்பங்களில் அன்றைய சரித்திர நாயகர்களைத் தேடுவேன். அப்படித் தேடிய

# வாள் வீச்சின் ஒலி!

'பொன்னியின் செல்வன்'. மிகச் சிறிய வயதிலேயே, அதாவது பள்ளியில் படிக்கும் காலத்திலேயே பொன்னியின் செல்வனைப் படித்துள்ளேன். அந்தச் சிறிய வயதில், கதையில் பல விஷயங்கள் புரியாது போனாலும் ஏதோ ஓர் ஈர்ப்பு! அதே நாவலை பின்னாட்களில் படித்தபோது அந்த எழுத்து ஓட்டத்தில் நானும் பயணமானேன். அவருடைய எல்லா நாவல்களுமே எனக்குள் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தின. அதே நாவலை ஒவ்வொரு முறை படிக்கும் போதும் ஒவ்வொரு விஷயத்தைக் கற்றுக் கொள்ள முடிந்தது. சரித்திரத்தின்மீது ஆர்வம் ஏற்பட கல்கியின் நாவல்களும் ஒரு



## இயக்குநர் சிம்புதேவன்

போது எனக்குக் கிடைத்தவை நிறைய ஆச்சர்யங்கள்.

மன்னர்கள் என்று அந்த மியூஸியத்தில் அடையாளம் காட்டப்பட்டவர்கள், நம்மைப் போன்று மிகச் சாதாரண மனிதர்களாகவே இருந்தனர். ஆஜானுபாகுவான உடலமைப்போ, பளபளக்கும் ஆடை, ஆபரணங்களோ கிடையாது. மருது சகோதரர்களின் சிற்பங்கள் தலையில் ஒரு தலைப்பாகை, இடுப்பில் வேட்டி போன்ற ஆடை, ஒரு சிறிய கத்தி இவற்றுடன்தான் காணப்பட்டன. அந்த வாள்களுடன் போரிட்டால் 'டணால்! டணால்!' ஓசையெல்லாம் எழாது. சினிமா உணர்த்திய ராஜ வம்சத்து பிம்பங்கள் மிகைப்படுத்தப்பட்டவை என்பதைப் புரிந்துகொள்ள அப்போது தெரியவில்லை.

சினிமாவில் வீரபாண்டிய கட்டபொம்மன் நடந்து வரும் கம்பீரம், நிற்கும் தோரணை, அவரது மேனரிஸம் இவற்றையெல்லாம் பார்த்து ஒரு உருவத்தை வகுத்திருந்த எனக்கு, இந்தச் சிற்பங்கள் குழப்பத்தை உண்டாக்கின. எது நிஜம்? எது கற்பனை? நமது சரித்திர





"அந்த மியூஸியத்தில் மன்னர்கள் என்று அடையாளம் காட்டப்பட்டவர்கள் எல்லாம் நம்மைப் போன்று சாதாரண மனிதர்களாகவே இருந்தனர்."



நாவல்களில் அரசர்களைக் குறித்து கொடுக்கப்பட்டுள்ள அடையாளங்கள் சரியா? விடையைத் தேடும் ஆவலில் என் பயணம் தொடர்ந்தது.

தொடர்ந்த பயணத்தில் சில விஷயங்களைப் புரிந்துகொண்டேன். சரித்திரம் குறித்து கதைகளில் வருபவற்றை முழுமையாக பொய் என்று ஒதுக்க முடியாது வரலாற்று ரீதியான ஆய்வு ஆதாரங்களும் முழுவதும் சரி என்றாகிவிடாது. ஆதாரங்கள் ஆதாரங்கள் தானேயொழிய வரலாறு அல்லவே! ஆகவே சற்றே கற்பனையும் உண்மையும் கலந்தவைதான் சரித்திர நாவல்கள் என்பது புரிய ஆரம்பித்தது.

**பா**ர்த்திபன் கனவு படித்த அந்த நாட்கள் இன்னும் நினைவில் இருக்கின்றன. சோழ மன்னரின் சுதந்திர வேட்கை, பல்லவர்களின் கலை ஆர்வம், வீரம், காதல் எல்லாம் மிகச் சரியான விகிதத்தில் கலந்து, சாமான்ய வாசகனையும் எளிதில் ஈர்க்கும் வகையில் கதையோட்டம் சிறப்பாக அமைந்திருக்கும். கல்கியுடைய எழுத்தின் சக்தி அப்படி!

அன்று நான் வியந்து படித்த 'பார்த்திபன் கனவு' குறித்து, இன்று கல்கியில் பேசுவதைப் பெருமையாகக் கருதுகிறேன். நமது தமிழ் சினிமாவின் சரித்திரப் படங்கள் குறித்து... நாவல்களைத் திரைப்படங்களாக்குவது குறித்து... திரைக்கதையைக் குறித்து... அடுத்துவரும் வாரங்களில் இன்னும் கொஞ்சம் பேசுகிறேன்.

இப்போது பார்த்திபன் கனவுக்குள் நுழையுங்கள்.

படங்கள் : ஸ்ரீஹரி

# பார்த்திபன் கனவு

முதல் பாகம்

## 1. தோணித் துறை

**கா**வேரி நீரம் அமைதி கொண்டு விளங்கிற்று. உதயசூரியனின் செம்பொற் கிரணங்களால் நதியின் செந்நீர்ப் பிரவாகம் பொன்னிறம் பெற்றுத் திகழ்ந்தது. அந்தப் புண்ணிய நதிக்குப் 'பொன்னி' என்னும் பெயர் அந்த வேளையில் மிகப் பொருத்த மாய்த் தோன்றியது. சுழிகள் சுழல்களு டனே விரைந்து சென்று கொண்டிருந்த அந்தப் பிரவாகத்தின் மீது காலை இளங் காற்று தவழ்ந்து விளையாடி இந்திரஜால வித்தைகள் காட்டிக் கொண்டிருந்தது. சின்னஞ்சிறு அலைகள் ஒன்றோடொன்று லேசாக மோதியபோது சிதறி விழுந்த ஆயிரமாயிரம் நீர்த்துளிகள் ஜாஜ்வல்யமான ரத்தினங்களாகவும், கோமேதகங்களாகவும், வைரங்களாகவும், மரகதங்களாகவும் பிர காசித்துக் காவேரி நதியை ஒரு மாயா புரியாக ஆக்கிக்கொண்டிருந்தன.

ஆற்றங்கரையில் ஆலமரங்கள் நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் விழுதுகள் விட்டு, விசாலமாய்ப் படர்ந்திருந்தன. மரங்களில் பழைய இலைகள் எல்லாம் உதிர்ந்து புதிதாய்த் தளிர்விட்டிருந்த காலம். அந்த இளந் தளிர்களின் மீது காலைக் கதிரவனின் பொற்கிரணங்கள் படிந்து, அவற்றைத் தங்கத் தகடுகளாகச் செய்து கொண்டிருந் தன.

கண்ணுக்கெட்டிய தூரம் தண்ணீர் மய மாய்த் தோன்றிய அந்த நதியின் மத்தியில், வடகிழக்குத் திசையிலே ஒரு பசுமையான தீவு காணப்பட்டது. தீவின் நடுவில் பச்சை மரங்களுக்கு மேலே கம்பீரமாகத் தலை தூக்கி நின்ற மாளிகையின் தங்கக் கலசம், தகதகவென்று ஒளிமயமாய் விளங்கிற்று.

**அ**ந்த மனோகரமான காலை நேரத் தில் அங்கு எழுந்த பலவகைச் சப்தங்கள் நதிதீரத்தின் அமைதியை நன்கு எடுத்துக் காட்டுவனவாயிருந்தன. விசாலமான ஆலமரங்களில் வாழ்ந்த பறவை இனங் கள், சூரியோதயத்தை வரவேற்றுப் பற்பல இசைகளில் கீதங்கள் பாடின. அந்த இயற் கைச் சங்கீதத்துக்கு நதிப் பிரவாகத்தின் 'ஹோ' என்ற ஓசை சுருதி கொடுத்துக் கொண்டிருந்தது. உணவு தேடும் பொருட்டு வெளியே கிளம்புவதற்கு ஆயத்தமான பறவைகள், தம் சிறகுகளை

அமரர் கல்கி



அடித்து ஆர்ப்பரித்தன. தாய்ப் பறவைகள் குஞ்சுகளிடம் கொஞ்சிக் கொஞ்சி விடை பெற்றுக் கொண்டிருந்தன.

ஆலமரங்களுக்கு நடுவே ஓங்கி வளர்ந்திருந்த அரச மரம் தன் இலைகளைச் சலசல வென்று ஓசைப்படுத்தி 'நானும் இருக்கிறேன்' என்று தெரியப்படுத்திற்று.

நதி ஓரத்தில் ஆலம் விழுதுகளில் கட்டிப் போட்டிருந்த தெப்பங்களைத் தண்ணீர்ப் பிரவாகம் அடித்துக்கொண்டு போவதற்கு எவ்வளவோ வீராவேசத்துடன் முயன்றது. அது முடியாமற் போகவே 'இருக்கட்டும் இருக்கட்டும்' என்று கோபக் குரலில் இரைந்துகொண்டே போனது.

கரையில் சற்று தூரத்தில் ஓர் ஆலமரத்தினடியில் குடிசை வீடு ஒன்று காணப்பட்டது. அதன் கூரை வழியாக அடுப்புப் புகை வந்து கொண்டிருந்தது. அடுப்பில் கம்பு அடை வேகும் வாசனையும் லேசாக வந்தது.

குடிசையின் பக்கத்தில் கறவை எருமை ஒன்று படுத்து அசைபோட்டுக் கொண்டிருந்தது. அதன் கன்று அருகில் நின்று, தாய் அசைபோடுவதை மிக ஆச்சரியத்துடனே உற்று நோக்கிக் கொண்டிருந்தது.

டக்டக்...டக்டக், டக்டக்!

வரவர அந்தச் சப்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இதோ வருகிறது! நாலு கால் பாய்ச்சலில் ஒரு கம்பீரமான குதிரை. அதன் மேல் ஆஜானுபாகுவான வீரன் ஒருவன் காணப்படுகிறான். வந்த வேகத்தில் குதிரையும் வீரனும் வியர்வையில் முழுகியிருக்கிறார்கள். தோணித் துறை வந்ததும் குதிரை நிற்கிறது. வீரன் அதன் மேலிருந்து குதித்து இறங்குகிறான்.

குடிசைக்குள்ளே இளம் பெண் ஒருத்தி அடுப்பில் அடை சுட்டுக்கொண்டிருந்தாள். அருகில் திடகாத்திரனான ஒரு வாலிபன் உட்கார்ந்து, தைத்த இளம் ஆலம் இலையிலே போட்டிருந்த கம்பு அடையைக் கீரைக் குழம்புடன் ருசி பார்த்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஒருதடவை அவன் நாக்கைச் சப்புக் கொட்டி விட்டு, "அடி வள்ளி, இன்னும் எத்தனை நாளைக்கு உன் கையால் கம்பு அடையும் கீரைக் குழம்பையும் சாப்பிட எனக்குக்



கொடுத்து வைத்திருக்கிறதோ தெரிய வில்லை!'' என்றான்.

''தினம் போது விடிந்தால் நீ இப்படித் தான் சொல்லிக் கொண்டிருக்கிறாய். இன் னொரு தடவை சொன்னால் இதோ இந்த அடுப்பை வெட்டி காவேரியில் போட்டு விடுவேன் பார்!'' என்றாள் அந்தப் பெண்.

''நான் விளையாட்டுக்குச் சொல்ல வில்லை. வள்ளி! மகாராஜாவும் மகா ராணியும் நேற்றுப் பேசிக்கொண் டிருந்ததைக் கேட்டேன். யுத்தம் நிச்சயமாய் வரப் போகிறது'' என்றான் வாலிபன்.

''யுத்தம் வந்தால் உனக்கு என்ன என்று தான் கேட்கிறேன். உன்னை யார் யுத்தத் துக்கு அழைக்கிறார்கள்! உன்பாட்டுக்குப் பட கோட்டிக் கொண்டு இருக்க வேண்டியதுதானே?''

''அதுதான் இல்லை. நான் மகாராஜா வின் காலிலே விழுந்து கேட்டுக் கொள்ளப் போகிறேன். என்னையும் யுத்தத்துக்கு அழைத்துக்கொண்டு போகச் சொல்லி.''

''நான் உன் காலிலே விழுந்து என்னை யும் உன்னோடு அழைத்துக் கொண்டு போ என்று கேட்டுக் கொள்ளப் போகி றேன். அதற்கு உனக்கு இஷ்டமில்லாவிட்டால் காவேரி ஆற்றோடு போன வளை எடுத்துக் காப்பாற்றி னாயோ இல்லையோ மறு படியும் அந்தக் காவேரியிலே இழுத்து விட்டு விட்டுப் போய்விடு.''

''அதுதான் சரி. வள்ளி!



சோழ தேசம் இப்போது அப்படித்தான் ஆகிவிட்டது. பெண் பிள்ளைகள் யுத்தத் துக்குப் போக வேண்டியது, ஆண் பிள்ளை கள் வீட்டுக்குள் ஒளிந்துகொண்டிருக்க வேண்டியது. இரு, இரு, குதிரை வருகிற சப்தம் போல் கேட்கிறதே.''

ஆம்: அந்தச் சமயத்திலேதான் 'டக்டக், டக்டக்' என்ற குதிரைக் காலடியின் சப்தம் கேட்டது. அந்தச் சப்தத்தினால் அவ் வாலிபனின் உடம்பில் ஒரு துடிப்பு உண் டாயிற்று. அப்படியே எச்சிற் கையோடு எழுந்தான். வாசற்புறம் ஓடினான்.

அங்கே அப்போதுதான் குதிரை மீதி ருந்து இறங்கிய வீரன், ''பொன்னா! மகா ராஜாவுக்குச் செய்தி கொண்டு வந்திருக் கிறேன். சீக்கிரம் தோணியை எடு!'' என்றான்.

பொன்னன், ''இதோ வந்துவிட்டேன்!'' என்று சொல்லி விட்டு உள்ளே ஓடினான். அச்சமயம் வள்ளி சட்டுவத்தில் இன் னொரு அடை தட்டுவதற்காக மாவை எடுத்துக் கொண்டிருந்தாள். ''வள்ளி! உறையூரிலிருந்து சேதி கொண்டு வந்திருக் கிறான். அவசரச் சேதியாம். நான் போய் வருகிறேன்'' என்றான் பொன்னன்.

''நல்ல அவசரச் சேதி! அரை வயிறுகூட நிரம்பியிராதே? எனக்குப் பிடிக்கவே யில்லை'' என்று வள்ளி முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

''அதற்கென்ன செய்கிறது, வள்ளி. அரண்மனைச் சேவகம் என்றால் சும் மாவா?'' என்று பொன்னன் சொல்லிக் கொண்டே அவளுடைய சமீபம் சென் றான். கோபம் கொண்ட அவளது முகத்தைத் தன் கைகளால் திருப்பினான். வள்ளி புன்னகையுடன் தன் முகத்தின் மேல் விழுந்திருந்த கூந்தலை இடது கையால் எடுத்துச் சொருக்குப் போட்டுக் கொண்டு, ''சீக்கிரம் வந்து விடுகிறாயா?'' என்று சொல்லிவிட்டுப் பொன்னனை அண்ணாந்து பார்த்தாள். பொன்னன் அவ ளுடைய முகத்தை நோக்கிக் குனிந்தான். அப்போது வெளியிலிருந்து, ''எத்தனை நேரம் பொன்னா?'' என்று கூச்சல் கேட்கவே, பொன்னன் திடுக்கிட்டவனாய், ''இதோ வந்துவிட்டேன்!'' என்று கூச்சலிட் டுக்கொண்டு வெளியே ஓடினான்.



## 2. ராஜ குடும்பம்

பொன்னன் போன பிறகு வள்ளி வீட்டுக் காரியங்களைப் பார்க்கத் தொடங் கினாள். குடிசையை மெழுகிச் சுத்தம் செய்தாள். மரத்தடியில் கட்டியிருந்த எருமை மாட்டைக் கறந்து கொண்டு வந்தாள். பிறகு காவேரியில் மரக் கிளை கள் தாழ்ந்திருந்த ஓரிடத்திலே இறங் கிக் குளித்துவிட்டு வந்தாள். சேலை மாற்றிக்கொண்ட பிறகு மறுபடியும் அடுப்பு மூட்டிச் சமையல் செய்யத் தொடங்கினாள்.

ஆனால், அவளுடைய மனது என் னமோ பரபரவென்று அலைந்து கொண்டிருந்தது. அடிக்கடி குடிசை வாசலுக்கு வந்து, தன்னுடைய கரிய பெரிய கண்களைச் சுழற்றி, நாலாபுற மும் பார்த்துவிட்டு உள்ளே போனாள்.

ஏதோ விசேஷ சம்பவங்கள் நடக்கப் போகின்றன என்று ஆவலுடன் எதிர் பார்த்தவளாய்த் தோன்றினாள்.

அவள் எதிர்பார்த்தது வீண் போக வில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் உறை யூர்ப் பக்கத்திலிருந்து பத்துப் பதினைந்து குதிரை வீரர்கள் வந்தார்கள். அவர்களுக்கு மத்தியில், அழகாக அலங்கரிக்கப்பட்ட இரண்டு வெள்ளைப் புரவிகளும் ஒரு தந்தப் பல்லக்கும் வந்தன. அந்த வெண் புரவிகளின் மேல் யாரும் வீற்றிருக்க வில்லை; பல்லக்கும் வெறுமையாகவே இருந்தது. திடகாத்திர தேகிகளான எட்டுப் பேர் பல்லக்கைச் சுமந்து கொண்டு வந்தார்கள்.

எல்லாரும் தோணித் துறைக்குச் சற்று தூரத்தில் வந்து நின்றார்கள். பல்லக்கு கீழே இறக்கப்பட்டது. குதிரை மீதிருந்தவர்களும் கீழே இறங்கிக் குதிரைகளை மரங்களில் கட்டினார்கள்.

இதையெல்லாம் குடிசை வாசலில் நின்று வள்ளி கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் அப்படி நிற்பதைப் பார்த்த வீரர்களில் ஒருவன், ''அண்ணே! வள்ளி யிடம் தண்ணீர் வாங்கிக் குடித்துவிட்டு வரலாம்'' என்றான்.

''அடே வேலப்பா! காவேரி நிறையத் தண்ணீர் போகிறது. வள்ளியிடம் என்னத் திற்காகத் தண்ணீர் கேட்கப் போகிறாய்?'' என்றான் மற்றவன்.

''இருந்தாலும், வள்ளியின் கையால் தண்ணீர் குடிப்பது போல ஆகுமா, அண்ணே!''

இப்படி பேசிக்கொண்டு இருவரும் குடிசையருகில் வந்து சேர்ந்தார்கள்.

''வள்ளி! கொஞ்சம் தாகத்துக்குத் தண் ணீர் தருகிறாயா?'' என்று வேலப்பன் கேட்டான்.

வள்ளி உள்ளே விரைவாகச் சென்று சட்டியில் மோர் எடுத்துக்கொண்டு வந்து இரண்டு பேருக்கும் கொடுத்தாள். அவர்கள் குடிக்கும்போதே, ''மகாராஜா இன்றைக்கு உறையூருக்குப் போகிறாராமே? ஏன் இவ் வளவு அவசரம்? இந்த மாதமெல்லாம் அவர் 'வசந்த மாளிகை'யில் இருப்பது வழக்கமாயிற்றே?'' என்று கேட்டாள்.

''எங்களை ஏன் கேட்கிறாய், வள்ளி? உன்னுடைய புருஷனைக் கேட்கிறது தானே? படகோட்டி பொன்னனுக்குத் தெரியாத ராஜ ரகசியம் என்ன

**''பெரிய யுத்தம் வரப் போகிறதே, தெரியாதா உனக்கு?''**

இருக்கிறது?'' என்றான் வேலப்பன்.

''காலையில் சாப்பிட உட்கார்ந்தார், அதற்குள் அவசரமாய் ஆள் வந்து மகா ராஜாவுக்குச் சேதி கொண்டு போக வேண்டுமென்று சொல்லவே, எழுந்து போய்விட்டார். சரியாகச் சாப்பிடக்கூட இல்லை!'' என்றாள் வள்ளி.

''பாரப்பா, புருஷன் பேரில் உள்ள கரிசனத்தை! பெண்சாதி என்றால் இப் படியல்லவோ இருக்க வேணும்?'' என் றான் வேலப்பன். வள்ளியின் கன்னங்கள் வெட்கத்தால் குழிந்தன. ''சரிதான் போங்கள்! பரிகாசம் போதும்'' என்றாள்.

''இல்லை வள்ளி! இந்த மாதிரி பரிகாச மெல்லாம் இன்னும் எத்தனை நாளைக்குச் செய்யப் போகிறோம்'' என்றான் வேலப்பன்.

''ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்! என்ன சமாசாரம் என்றுதான் சொல் லுங்களேன்?'' என்றாள் வள்ளி.

''பெரிய யுத்தம் வரப் போகிறதே, தெரியாதா உனக்கு?''

''ஆமாம்; யுத்தம் யுத்தம் என்றுதான் பேச்சு நடக்கிறது. ஆனால், என்னத்துக்காக யுத்தம் என்றுதான் தெரியவில்லை.''

''நாலைந்து வருஷமாய் நமது மகா ராஜா, காஞ்சி நரசிம்மவர்ம சக்கரவர்த் திக்குக் கப்பம் கட்டவில்லை. வடக்கே படையெடுத்துப் போயிருந்த சக்கரவர்த்தி திரும்பி வந்து விட்டாராம். நமது மகாராஜா நாலு வருஷமாய்க் கப்பம் கட்டாததற்கு

முகாந்திரம் கேட்பதற்காகத் தூதர்களை அனுப்பியிருக்கிறாராம். அவர்கள் இன்றைக்கு வந்து சேர்வார்களாம்'' என்றான் வேலப்பன்.

''இதற்காக யுத்தம் ஏன் வர வேண்டும்? நாலு வருஷத்துக் கப்பத்தையும் சேர்த்துக் கொடுத்துவிட்டால் போகிறது?'' என்றாள் வள்ளி.

''அதுதான் நம்முடைய மகாராஜாவுக்கு இஷ்டமில்லை. முன் வைத்த காலைப் பின் வைக்க முடியாது என்கிறார்.''

**அவளுடைய உள்ளத்தில் என்னென்ன சிந்தனைகள் கொந்தளித்து எழுந்தனவோ யார் கண்டது!**

இப்படி இவர்கள் பேசிக் கொண்டேயிருக்கும்போது, நடு ஆற்றில் படகு வருவது தெரிந்தது. வேலப்பனும் இன்னொருவனும் உடனே திரும்பிப் போய் மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் படகு துறையை அடைந்தது. இது பொன்னன் போகும் போது தள்ளிக்கொண்டுப் போன சாதாரணப் படகல்ல; அழகிய வேலைப்பாடுகளுடன் ஒரு பக்கம் விமானம் அமைத்துச் செய்திருந்த ராஜ படகு. படகின் விமானத்தில் மூன்று பேர் அமர்ந்திருந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் ராஜகுடும்பத்தினர் என்று தெரிந்து கொள்ளலாம். பார்த்திப சோழ மகாராஜாவும், அருள்மொழி மகாராணியும், இளவரசர் விக்கிரமனுந்தான் அவர்கள்.

அரையில் பூண்ட உடைவாளும், கையில் நெடிய வேலாயுதமும் தரித்த ஆஜானுபாகுகளான இரண்டு மெய்க்காவலர்கள் படகின் இருபுறத்திலும் நின்று கொண்டிருந்தார்கள். பொன்னனும் இன்னொருவனும் படகு தள்ளிக் கொண்டு வந்தார்கள்.

படகு கரை சேர்ந்ததும், மெய்க்காவலர்கள் இருவரும் முதலில் இறங்கி, ''ராஜாதிராஜ ராஜ மார்த்தாண்ட, ராஜகம்பீர, சோழ மண்டலாதிபதி பார்த்திப மகாராஜா, பராக்'' என்று கூவினார்கள். கரையில் நின்ற வீரர்கள் அவ்வளவு பேரும் கும்பிட்ட கைகளுடன் ''மகாராஜா வெல்க'' என்று எதிரொலி செய்தார்கள்.

படகை விட்டு இறங்கியதும் மகாராஜா பொன்னனுடைய குடிசைப் பக்கம் நோக்கினார். குடிசை வாசலில் நின்று பார்த்துக் கொண்டிருந்த வள்ளியின் பேரில் அவருடைய பார்வை விழுந்தது. உடனே கையினால் சமிக்ஞை செய்து அழைத்தார். வள்ளி விரைவாக ஓடி வந்து தண்டனிட்டாள். மகாராஜா எழுந்திருக்கச் சொன்னவுடன் எழுந்து பொன்னனுக்குப் பின்னால் அடக்க ஒடுக்கத்துடன் நின்றாள். ''வள்ளி! உன்னைப் பொன்னன் நன்றாகப் பார்த்துக் கொள்கிறானா?'' என்று மகாராஜா கேட்டார். வள்ளி தலையைக் குனிந்து கொண்டு புன்னகை செய்தாள். பதில் சொல்ல அவளுக்கு நா எழவில்லை. அப்போது மகாராணி, ''அவளை அப்படி நீங்கள் கேட்டிருக்கக் கூடாது. 'பொன்னனை நீ நன்றாய்ப் பார்த்துக் கொள்கிறாயா?' என்று கேட்டால், பதில் சொல்வாள்'' என்றாள்.

மகாராஜா சிரித்துவிட்டு, ''வள்ளி! மகாராணி சொன்னது காதில் விழுந்ததா? பொன்னனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். அந்தண்டை இந்தண்டை போக விடாதே. உன்னை வெள்ளத்திலிருந்து கரை சேர்த்தது போல் இன்னும் யாரை யாவது கொண்டு வந்து கரை சேர்த்து வைக்கப் போகிறான்'' என்றார்.

வள்ளியை வெட்கம் ஒரு பக்கமும் சந்தோஷம் ஒரு பக்கமும் பிடுங்கித் தின்றன. தேகம் நூறு கோணலாக வளைந்தது.

ஆனால், பொன்னனோ இந்த ஹாஸ்யப் பேச்சைக் கவனித்ததாகவே தெரியவில்லை. அவன் இரு கரங்களையும் கூப்பி, ''மகாராஜா! ஒரு வரங் கொடுக்க வேணும்! யுத்தத்துக்கு மகாராஜா போகும் போது அடிமையையும் அழைத்துப் போக

வேணும்'' என்றான்.

மகாராஜா சற்று நிதானித்தார். பிறகு சொன்னார் ''பொன்னா! உன்னுடைய மனது எனக்குத் தெரியும். ஆனாலும் நீ கேட்ட வரம் கொடுக்க முடியாது. நீ இங்கேதான் இருக்க வேண்டும். போர்க் களத்திலிருந்து நான் திரும்பி வராவிட்டால் இளவரசருக்கு நீந்தக் கற்றுக் கொடுக்கும் பொறுப்பை உன்னிடம் ஒப்புவிக்கிறேன். தெரிகிறதா?'' என்றார். இதைக் கேட்டதும் பொன்னன், வள்ளி இருவருடைய கண் களிலும் நீர் ததும்பிற்று. மகாராணி அருள்மொழி தேவி ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள். அவளுடைய உள்ளத்தில் என்னென்ன சிந்தனைகள் கொந்தளித்து எழுந்தனவோ, யார் கண்டது?

**ம**காராஜாவும் பரிவாரங்களும் வெகு தூரம் போன பிறகுதான் வள்ளி பழைய வள்ளியானாள். அப்போது பொன்னனைப் பார்த்து ''பார்த்தாயா! மகாராஜா என்ன சொன்னார்கள்! என்னைக் கேட்காமல் அந்தண்டை, இந்தண்டை போகக் கூடாது தெரியுமா?'' என்றாள்.

''அப்படியானால், இப்போதே கேட்டு விடுகிறேன். வள்ளி, இன்று மத்தியானம் நான் உறையூர் போக வேண்டும்'' என்றான் பொன்னன்.

''உறையூரிலே என்ன?'' என்று வள்ளி கேட்டாள்.

''இன்றைக்குப் பெரிய விசேஷமெல் லாம் நடக்கப் போகிறது. காஞ்சியிலிருந்து கப்பம் கேட்பதற்காகத் தூதர்கள் வரப் போகிறார்களாம். மகாராஜா 'முடியாது' என்று சொல்லப் போகிறாராம். நான் கட்டாயம் போக வேணும்'' என்றான் பொன்னன்.

அப்போது வள்ளி இரு கரங்களையும் குவித்துக்கொண்டு, குரலைப் பொன்னன் குரல் போல மாற்றிக்கொண்டு, ''மகாராஜா எனக்கு ஒரு வரம் கொடுக்க வேணும்; மகாராஜா யுத்தத்துக்குப் போனால் அடிமை யையும் அழைத்துப் போக வேணும்'' என்றாள்.

''சே, போ! இப்படி நீ பரிகாசம் செய்வதாயிருந்தால் நான் போகவில்லை'' என்றான் பொன்னன்.

இந்த உறுதியுடனேயே பொன்னன் சாவகாசமாகக் காவேரியாற்றில் இறங்கி நீந்திக் கொம்மாளம் போட்டுக்கொண் டிருந்தான். ஆனால், கொஞ்ச நேரத்துக் கெல்லாம் ''டக் டக், டக் டக்'' என்று குதிரைகளின் குளம்புச் சப்தம் கேட்டதும் அவனுக்குச் சொல்ல முடியாத பரபரப்பு உண்டாயிற்று. கரையேறி ஓடி வந்து பார்த்தான். வள்ளியும் குடிசைக்குள்ளிருந்து வெளியே வந்தாள். சிறிது நேரத்துக்கெல் லாம் முதலில் ஒரு குதிரையும், பின்னால் நாலு குதிரைகளும் கிழக்குத் திசையி லிருந்து அதிவேகமாய் வந்தன. முதல் குதிரையின் மேல் இருந்தவன் கையில் சிங்க உருவம் வரைந்த கொடி பிடித்துக் கொண்டிருந்தான். குதிரைகள் உறையூரை நோக்கிப் பறந்தன.

''சிங்கக் கொடி போட்டுக் கொண்டு போகிறார்களே, இவர்கள் யார்?'' என்று வள்ளி கேட்டாள்.

மெய்மறந்து நின்ற பொன்னன், திடுக்கிட்டவனாய், ''வள்ளி, இவர்கள்தான் பல்லவ தூதர்கள். நான் எப்படியும் இன்று உறையூர் போக வேணும். நீயும் வேணு மானால் வா! உன் பாட்டனையும் பார்த்தது போல இருக்கும்'' என்றான்.

(தொடரும்)



# பொன்னியைத் தந்தவர்!

தென்கச்சி கோ.சுவாமிநாதன்

பத்து வருடங்களுக்கு முன்னால் ஒரு தடவை நானும் என்னுடைய வானொலி நண்பர்களும் ஒரு காரில் தருமபுரியிலிருந்து ஒகேனகல் நோக்கி சென்று கொண்டிருந்தோம். கொஞ்ச தூரம் போயிருப்போம். உடன் வந்த நண்பர் ஒருவர் உற்சாகமாக ''இதுதான் சோகத்தூர்!'' என்றார்.

''இங்கு என்ன விசேஷம்?'' என்றேன் எதுவும் புரியாமல்.

''என்ன இப்படி கேட்கிறீர்கள்? இதுதான் நம்ம எஸ்.எஸ்.நாகராஜன் பிறந்த ஊர்!'' என்றார்.

டாக்டர் டி.என்.கோவிந்தசுவாமி அவர்கள் எழுதிய ''வேளாண்பெருந்தகை எஸ்.எஸ். நாகராஜன் என்கிற புத்தகத்தைக் கையில் எடுத்தவுடன் எனக்கு அந்த ஞாபகம்தான் முதலில் வந்தது.

'ஜே' பண்ணையின் தலைமை வேளாண்மைப் பொருளாதார வல்லுநர் திரு.எஸ்.எஸ்.நாகராஜன் அவர்களை அறியாத முன்னோடி விவசாயிகள் யாரும் இங்கே இருக்க முடியாது.

இன்றைக்கு பொன்னி அரிசியை எல்லோரும் விரும்பிச் சாப்பிடுகிறோம்.

இதை மலேசியாவிலிருந்து கொண்டு வந்து மறுவடிவம் கொடுத்து இங்கே பரவவிட்டவர் எஸ். எஸ்.நாகராஜன் என்பது எத்தனை பேருக்குத் தெரியும்?

அதுமட்டுமல்ல; சூப்பர்பொன்னியும், ஜிலகரப்பொன்னியும், இவர் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கும்.




இவர் எழுதிய நூல்கள், பெற்ற விருதுகள் எல்லாம் இந்த நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

நூலாசிரியரும் ஒரு வேளாண்மை வல்லுநர் என்பதால் தொழில்நுட்பக் கருத்துகளை முறையாகத் தந்திருக்கிறார்.

பொதுவாக நாம் பெரியவர்களைச் சந்திக்கிறபோது நம்முடைய கவலைகளைச் சொல்லி அதற்குப் பரிகாரம் தேடுவோம்.

ஆனால் எஸ்.எஸ்.நாகராஜன் என்ன சொல்கிறார் என்பதைக் கவனியுங்கள்; அவர் யாரைப் பற்றி அதிகம் கவலைப்படுகிறார் என்பது புரியும்.

ஒரு சமயம் அவர் தம் குடும்பத்தோடு சென்று காஞ்சிப் பெரியவரை சந்திக்கிறார்.

''சாமி! வரவர நெல்சாகுபடியில் செலவு அதிகமாகின்றது. வரவு குறைந்துவிட்டது. அதனால் நெல்சாகுபடியை விவசாயிகள் விட்டுவிடுவார்கள் போலிருக்கே..?''

எஸ்.எஸ்.நாகராஜனின் இந்தக் கேள்விக்குக் காஞ்சிப் பெரியவர் ஓர் அழகான பதிலைச் சொல்லியிருக்கிறார்.

அது என்ன பதில்?

தெரிந்து கொள்ள விருப்பமா?

அப்படியானால் நீங்கள் அவசியம் இந்தப் புத்தகத்தை வாங்கிப் படிக்க வேண்டும்!

**மூவேந்தர் அச்சகம், 73, சீனிவாசபெருமாள், சந்நிதி முதல் தெரு, சென்னை-14. விலை ரூ.65.00**

ஜாலி ஸ்டோர்ஸ்

# 10 'அமிதாப்ஜீ'க்கு ஐடியாக்கள்!





**பணத் தட்டுபாடு வரக்கூடாது என்பதற்காகவே தொடர்ந்து சினிமாவில் நடிக்கிறேன்.**
**-அமிதாப்பச்சன்**

சினிமாவில் நடித்தும் தட்டுப்பாடு ஏற்பட்டால் சமாளிக்க 'அமிதாப்ஜீ'க்கு சில ஐடியாக்கள்!

- ஷூட்டிங்க்குச் செல்கையில் கையோடு அடுப்பு எடுத்துச் சென்று பாவ் பாஜி, ஆலு டிக்கி வகையறாக்களைத் தயாரித்து, ஷூட்டிங் இடைவெளியில் யூனிட் ஆட்களுக்கு விற்கலாம்.

- மருமகள் ஐஸ்வர்யா ராயையும், மனைவி ஜெயாபச்சனையும் வீட்டு மொட்டை மாடியில் வடாம் போடச் சொல்லி, ஷூட்டிங் இல்லாத நாட்களில் வீடு வீடாகச் சென்று விற்கலாம்.

- ஷூட்டிங் ஸ்பாட்டுக்குச் சென்றதும் கார் சும்மாதானே இருக்கும்? அதை வாடகைக்கு விடலாம். இரவு பிக்கப் செய்து கொள்ள சொல்லலாம்.

- தனது 'டிரேட் மார்க்'

தாடிக்குக் காப்புரிமை பெற்று, இந்தியாவில் வேறு யாரெல்லாம் அதுபோல தாடி வைத்துள்ளார்களோ, அவர்களிடம் பணம் கறக்கலாம்.



- 'நான் எம்.பி.யாக இருந்தபோது', 'ரஜினியும், நானும்...' போன்ற தலைப்புகளில் மாதம் ஒரு புத்தகம் எழுதி விற்பனைக்கு விடலாம்.

- சினிமாவில் சம்பாதித்ததைப் பாதுகாப்பாக முதலீடு செய்வது எப்படி என்று நண்பர் ரஜினியிடம் டியூசன் எடுக்கலாம்.

- 'இரண்டு இந்திப் படங்களில் நடிக்க வாய்ப்பளித்தால் ஒரு பிராந்திய மொழிப் படத்தில் இலவசமாக நடிப்பேன்' என்ற திட்டத்தை அறிவிக்கலாம். அதன் மூலம் மளமளவென்று வருமானம் உயரும்.

- ஹோலி தள்ளுபடி, தீபாவளி சலுகை என்று அறிவித்து அந்த மாதங்களில் பாதி சம்பளத்துக்கு (பல படங்களில்) நடிக்கலாம்.

- முக்கால் பாண்ட் அணிய ஆரம்பித்து துணி மற்றும் தையல்கூலி மிச்சம் பிடிக்கலாம். அதுவே ஃபேஷனாகி விடும் என்பதால் உங்களுக்கு ரசிகர்களின் ஆதரவு பெருகும்.

- என்னதான் உலக அழகியை மணந்தாலும் மகன் தந்தைக்குக் குழந்தைதானே? ஆகவே, அபிஷேக்பச்சன் வெளியே செல்ல காருக்குப் பதிலாக மூன்று சக்கர சைக்கிள் தரலாம். (சென்னை சரவணா ஸ்டோர்ஸில் மலிவாக கிடைக்கும். வாங்கி அனுப்பட்டுமா ஜீ?)

- குசும்புராஜ்



சென்னையின் புறநகர் பகுதியில் உள்ளது செங்குன்றம். அங்கு தமிழக அரசின் நுகர்பொருள் வாணிபக் கழகத்தின் அதிகாரிகள் நடத்திய சோதனையில் நூற்று ஐம்பது டன் டீத்தூள் பிடிபட்டது. காரணம், அதில் டீ தயாரித்துப் பருகினால் சுறுசுறுப்பு வராது; பதிலாக புற்றுநோய்தான் வரும். அது முந்திரியின் தோலுக்குச் சாயமேற்றி டீ தூள் போலவே பொடித்தும், ஏற்கெனவே பயன்படுத்திய, டீ தூளைக் காயவைத்து, சாயம் சேர்த்தும், நல்ல டீத்தூளுடன் கலப்படம் செய்யப்பட்ட டீத்தூள். இந்தக் கலப்பட வியாபாரம், டீ தூளில் மட்டுமில்லாமல் ஏறத்தாழ நாம் கடைகளில் வாங்கும் எல்லா பொருட்களிலுமே நடக்கிறது. இது தெரியாமல், கலப்படப் பொருட்களை, காசு





# கலப்படம் அறியும்

கொடுத்து வாங்கி பிறகு அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் மக்கள்.

''நம் நாட்டில் இதுபோன்ற தவறுகளைத் தண்டிக்க கடுமையான சட்டங்கள் உள்ளன. ஆனால், அந்தச் சட்டங்களைப் பயன்படுத்தி, தவறு செய்பவர்களுக்கு உரிய தண்டனைகள் வழங்கப்படுவதில்லை. அதனால்தான், கலப்படக்காரர்கள் உள்ளிட்ட பலரும் பயம் இல்லாமல் குற்றங்களைச் செய்கிறார்கள்'' என்கிறார் கான்சர்ட் நுகர்வோர் பாதுகாப்பு அமைப்பின் நிறுவனர் தேசிகன். சட்டபூர்வமான நடவடிக்கைகள் ஒருபுறம் இருந்தாலும், நுகர்வோர் மத்தியில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவது மிகவும் அவசியம் என்று கருதி, கலப்படத்தைக் கண்டுபிடிக்க 'அன்னம் உடனடி ஆய்வுப் பெட்டி'யை உருவாக்கி இருக்கிறது கான்சர்ட்.

மத்திய அரசின் நுகர்வோர் பாதுகாப்புத் துறையின் அங்கீகாரம் பெற்றிருக்கும் இந்த ஆய்வுப் பெட்டியில் பன்னிரண்டு விதமான ரசாயனக் கரைசல்களும், சில உபகரணங்களும் உள்ளன. இவற்றைப் பயன்படுத்தி சுமார் ஐம்பது விதமான கலப்படப் பரிசோதனைகள் செய்ய முடியும். தமிழக அரசு, ஐந்நூறு ரூபாய் விலையுள்ள இந்த



ஆய்வுப் பெட்டியை வாங்கி நுகர்வோர் அமைப்புகளுக்கு வழங்க ஏற்பாடு செய்துள்ளது. கான்சர்ட் அமைப்பினர், பல்வேறு ஊர்களுக்குச் சென்று மக்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகிறார்கள்.

காஞ்சிபுரம் அருகே உள்ள ஒரு சுய உதவிக் குழுவினர், தாங்கள் ஊறுகாய் தயாரிக்க வழக்கமாகப் பயன்படுத்தும் மிளகாய்ப்பொடியை 'அன்னம்' ஆய்வுப் பெட்டியின் உதவியுடன் பரிசோதித்துப் பார்த்தபோது, அந்த மிளகாய்ப் பொடிக்கு செக்கச்செவேலென்று நிறம் வேண்டும் என்பதற்காக, 'சூடான் 3' என்ற சிவப்புச் சாயம் பயன்படுத்தப்பட்டிருப்பது தெரிய வந்துள்ளது. இந்தச் சாயம் சேர்த்த மிளகாய்ப் பொடியைத் தொடர்ந்து பயன்படுத்தினால், புற்றுநோய் வரும் அபாயம் இருப்பது தெரிய வந்துள்ளது! இதைக் கேட்ட அந்தப் பெண்கள் அதிர்ந்து போனார்கள்''என்கிறார் தேசிகன்.

# அன்னம்!

**எ**ப்படியெல்லாம் கலப்படம் நடக்கிறது என்கிற ஒரு பட்டியலே தருகிறார் கான்சர்ட் அமைப்பின் இயக்குனரான சந்தான ராஜன். கடலைப் பருப்பில் கேசரி பருப்பை கலப்படம் செய்கிறார்கள். இதனைப் பயன்படுத்தினால் மூட்டு வலி, பக்க வாதம் வரும். கடுகில் கலப்படம் செய்யப்படும் ஆர்ஜிமோன் விதைகளால் தோல் நோய்கள் வரும். மஞ்சள் தூளில் கலப்படம் செய்யப்படும் ஈயக் குரோமேட்டினால் ரத்த சோகை, குறைப் பிரசவம், கை-கால் வாதம், மூளை பாதிப்பு வரும். உணவு எண்ணெய்களில் ஆர்ஜிமோன் விதைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயைக் கலந்து விற்கிறார்கள். இந்த எண்ணெயைப் பயன்படுத்துவதால் இதயம் பாதிக்கப்படுவதுடன், பார்வை இழப்பும் நேரிடலாம்.

பெண்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்துவதில் நாங்கள் அதிக கவனம் செலுத்துகிறோம். ஏனென்றால், ஒரு கடையில் விற்பனை செய்யப்படுவது கலப்படப் பொருள் என்று ஒரு பெண்ணுக்குத் தெரிய வந்தால், உடனேயாக அக்கம் பக்கத்தில் உள்ளவர்களிடம் அதைச் சொல்லி எச்சரிப்பார். அந்தப் பகுதி மக்கள் அந்தக் கடையில் பொருட்கள் வாங்காமல் தவிர்ப்பார்கள். அதன் பின் அந்தக் கடைக்காரர், தரமான பொருட்களை மட்டுமே விற்பனை செய்வார்'' என்கிறார் தேசிகன்.



"அன்னம் கலப்பட ஆய்வுப் பெட்டியைப் பயன்படுத்தி, சுமார் ஐம்பது விதமான கலப்படப் பரிசோதனைகளை செய்ய முடியும்"

இனிமே அன்னத்தின் பேரைக் கேட்டாலே கலப்படக்காரங்க ச்சும்மா அதிருவாங்கல்ல?

**– எஸ். சந்திரமௌலி**




* 'மேகலா' படப்பிடிப்பில்...

# சீரியல் இயக்குநர்கள்

சந்தோஷத்திலிருக்கிறார் டைரக்டர் விக்ரமாதித்தன். ஜெயா டீ.வி.யில் 'கெட்டி மேளம்' முடிந்த கையோடு சன் டீ.வி.யில் 'மலர்களை' இயக்கியவர், தற்போது 'மேகலா'வைத் தொடங்கி, சீரியல் பிரியர்களின் நெஞ்சங்களைத் தொட்டிருக்கிறார். அதே குஷியோடு நம்மிடம் பேச ஆரம்பித்தார்.

''மேகலாவை வெளியாளா யாரும் நினைக்கறதில்ல. தங்களோட குடும்பத்துல ஒருத்தியாத்தான் பார்க்குறாங்க. அதுவும் காயத்ரி மாதிரி ஒரு பெண்ணை நிராகரிக்க யாருக்கு மனசு வரும்'' என்கிறார் சிலிர்ப்போடு.

''அவ்ளோ நல்லா பண்றாங்களா?''

''என்ன இப்படிக் கேட்டுட்டீங்க? மெட்டி ஒலிக்கு ஒரு சரோ மாதிரி, எங்களுக்கு மேகலா. ஸ்பாட்ல அவங்களோட டெடிகேஷனைப் பார்க்க பிரமிப்பா இருக்கு. சொல்லாததையும் செஞ்சு நாம எதிர்பார்க்காத பெர்ஃபாமென்ஸ் தர்றவங்கதான் காயத்ரி.''

''மேகலா எதை நோக்கிப் பயணிக்கப் போறாங்க?''



* காயத்ரி

''சீரியல்னா அழுகை மட்டுமே பிரதானம்னு ஒரு பேரு வந்துடுச்சு. அதை மேகலால மாத்தப் போறோம். அறுசுவை உணவுன்னு சொல்ற மாதிரி, பலவிதமான உணர்வுகளும் கலந்து படைக்கறோம். வினுச் சக்ரவர்த்தி குடும்பத்தை அறிமுகப்படுத்தி காமெடிக்குப் பிள்ளையார் சுழி

போட்டிருக்கோம்.''

''சீரியல் டைரக்டர் எல்லாரும் கதாநாயகியா நடிக்கப் பிரபல நடிகைகளையே ஏன் தேடி ஓடுறீங்க?''

''சீரியல் நல்லா வரணும்ங்கறதுக்காகத்தான். ஒரு பாப்புலர் முகத்தைப் போட்டா நல்லா பிக்அப் ஆகும். மக்களும் ஒன்றிப் போய் பார்ப்பாங்க. டி.ஆர்.பி.ல ரேட் கூடும். இதைத் தவிர வேற எந்தப் பிரத்யேக காரணமும் இல்ல.''

''உங்க குரு திருமுருகன் மாதிரி உங்களுக்கும் அடுத்த டார்கெட் சினிமா தானா?''

''ஏன் சீரியல் நடிகர்கள் சினிமா எடுக்கக் கூடாதா? பிரிச்சுப் பிரிச்சு ஏன் பார்க்கறாங்கன்னு தெரியல. ரெண்டுலயுமே கதை தான் அடிப்படை. உணர்வுகள்தான் திரைக் கதை. அப்படியே அழகா கட்டடம் எழுப்பி, பின்னி மேய்ஞ்சுட வேண்டியது தான். ஆனா சரியான வாய்ப்பு அமையும் போதுதான் எல்லாம் சாத்தியமாகும். நேரம் வரும்போது நானும் படம் பண்ணுவேன். இப்போதைக்கு என் கவனமெல்லாம்




✱ விக்ரமாதித்தன்

# சினிமா எடுக்கக்கூடாதா?

மேகலாவ மேக்னட் மாதிரி தமிழ் சேனல் நேயர்களோட நெஞ்சங்கள்ல ஒட்ட வைக்கறதுதான்.''

''யாரைப் போட்டியா நினைக்கறீங்க?''

''யாரும் யாருக்கும் போட்டியில்ல. களத்துல குதிச்சு எல்லாரும் ஓடறோம். மத்தவங்களோட நோக்கம் எப்படியோ, என்னோடது எல்லோரும் கோட்டைத் தொடணும்ங்கறதுதான்!''

''சினிமாவவிட சீரியல் பண்றது கஷ்டமாமே...''

''கஷ்டம்னு நினைச்சா எல்லாமே கஷ்டம் தான். இஷ்டப்பட்டு செஞ்சா எதிரியக்கூட ஈஸியா சந்திக்கலாம். சினிமா, சீரியல் ரெண்டுத்துக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. சில வேறுபாடுகளும் உண்டு.''

''சீரியல்ல போதிய வருமானம் உண்டா?''

''கிடைக்கறதே இல்லன்னு மறுக்கறது பொய். தேவையான அளவு தர்றாங்க. சாதிச்சுட்டா உங்க உயரம் கூடிப் போகும். அதுக்கேத்த மாதிரி சம்பளமும்...''

– நிதர்ஸனா

## சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம் - 1

# ஜகஜ்ஜால ஜோடி!

டாக்டர் பி.ரவிச்சந்திரன்

எங்களைத் தவிர யாருமே எதிர்பார்க்கவில்லை. விறுவிறு விவாதம்! அட! போட வைக்கிற ஆலோசனைகள்! தொடக்கமே ஜெட் வேகத்தில் இருந்தது 'டீம் லீடர்ஸ்' மீட்டிங். ஒரு பன்னாட்டு வங்கிக்காகத் தயாரிக்கப்பட்டிருந்த புதிய மென்பொருளின் 'ஆல்பா வெர்ஷனை' பிய்த்துப் பிராய்ந்து கொண்டிருந்தனர் பலர். ஆனால், பெரும்பாலனவர்களின் கவனம் ராம் என்கிற எங்களின் ராம்குமார் மீதே குவிந்திருந்தது. அவன் எழுந்து பேச ஆரம்பித்தால், புதிய வெள்ளோட்ட மென்பொருளின் தலைவிதி தெரிந்துவிடும். அவன் பிட்டுப்பிட்டு வைப்பதில் இதை வங்கிக்குக் கொடுக்கலாமா, வேண்டாமா என்று சட்டென முடிவுக்கு வந்துவிடுவார்கள்.

ராம் இருக்கையிலிருந்து திடீரென்று எழுந்தான். ''டியர் ஃபிரண்ட்ஸ், எனக்கு ஃபீவர், ஏசியில உட்கார முடியல, என்னோட கருத்துகளை அடுத்த கூட்டத்துல சொல்றேன். ஐயம் சாரி'' - கேட்டுவிட்டு படபடப்பும், பயமும் பரவிய முகத்தோடு கூட்ட அரங்கைவிட்டு வெளியேறியவனை, மற்ற பத்தொன்பது பேர் நம்ப முடியாமல் பார்த்தார்கள்.

இருபத்தெட்டு வயதில் இவனது இதயம் இத்தனை படபடக்க எது காரணமாக இருக்கமுடியும். ஓ... காதலா? நிச்சயமாக இல்லை. ஊரில் அப்பா அம்மா வாக்குக் கொடுத்துவிட்ட அத்தை மகளின் காத்திருப்புக்குப் பதில் சொல்ல வேண்டுமே.

வேறு என்னதான் இவனுக்குப் பிரச்னை. அவனுக்கே அது தெரியாதபோது வேறு யாருக்குத் தெரியும்! எங்களுக்குத் தெரியும்! ஆச்சர்யமாக இருக்கிறதா? ராமை பத்துமாதம் வயிற்றில் சுமந்து பெற்றெடுத்த அவனது தாய் மணிமேகலைக்கே இருபத்தெட்டு வருடங்களாகத்தான் அவனைத் தெரியும். ஆனால், தாயின் கருப்பையில் நன்கு வளர்ச்சியடைந்து எட்டு வாரக் கருவாக அவன் உருக்கொண்டிருந்த காலம் முதலே, அவனை நாங்கள் நன்கு

## புதிய மருத்துவத் தொடர்

அறிவோம். திரையை விலக்கி நாங்கள் யாரென எங்கள் முகத்தைக் காட்டும் முன் ராமின் நதிமூலத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்ளுங்கள்.

**த**ஞ்சை மாவட்டத்தில் இருக்கிறது கள்ளக்குறிச்சி கிராமம். பணப்பயிர் விவசாயம் கொடிகட்டிப் பறக்கிற வளமான ஊர். இனிப்பான நிலத்தடி நீர். அந்த ஊரின் பெரிய மனைக்கட்டுகளில் ஒருவர் மதிசூடி. ராம்குமாரின் அப்பா. தமது குடும்பத்தின் சாப்பாட்டுக்கு இரண்டு ஏக்கர் நிலத்தை ஒதுக்கி மாட்டுச்சாணம், குப்பை எரு, தழை எரு போட்டுப் பார்த்துபார்த்து இயற்கை விவசாயம் செய்வார். ஆனால், எஞ்சிய நிலத்தில் ஜி.ஈ. எனப்படும் மரபணு மாற்றியமைக்கப்பட்ட நெல் விதைகளைப் பயிரிடுவார். எக்கச்சக்க விளைச்சல் பார்க்காவிட்டால் அவருக்குத் தூக்கம் வராது.

''உங்க அப்பா புரட்சி விவசாயின்னு பேரு வாங்கிட்டார்! நீ என்ன புரட்சி பண்ணப்போற?'' என்று ஊர்க்காரர்கள் உசுப்பிவிட்டதில் பி.இ. படித்து முடித்தான் ராம். கிராமத்தில் அதிகாலை ஐந்து மணிக்கு எழுவான். ஒரு லோட்டா நிறைய பானைத் தண்ணீரை ஒரே மூச்சில் குடிப்பான். பிறகு அப்பாவோடு வேர்க்க விறுவிறுக்க நூறு ஏக்கர் நிலத்தை ஒரு சுற்று சுற்றி வருவான். வீடு வந்து சேர்ந்ததுமே ஒரு வெண்கல சொம்பு நிறைய மோர் கலந்த நீராகாரம். எட்டு மணிக்குப் பத்து இட்லிகள். பதினொரு மணிக்கு இளநீர். மதிய சாப்பாட்டில் கட்டாயம் கீரை இருக்கும். இரவு ஓர் ஈடு இடியாப்பம். அதன்பிறகு அம்மா தரும் அரை லிட்டர் பசும்பாலைக் குடித்தால்தான் தூங்கவிடுவான்.

கேம்பஸ் இண்டர்வியூவில் தேர்வாகி, ஐந்தாண்டுகளுக்கு முன்பு டிரெய்னி புரோகிராமராக சென்னை வந்த பிறகு, எல்லாம் தலைகீழாய் ஆனது. மூன்றாவது வருடமே டீம் லீடர் பதவி உயர்வு. ஒரு ஃபோர்டு ஐகான் கார், ராஜா அண்ணாமலைபுரத்தில் ஓர் அபார்ட்மெண்ட். காலையில் எட்டு மணிக்குத்தான் எழுவான். அவசரமாகக் குளித்து டிபன் சாப்பிட நேரமில்லாமல்... கெமிகல்





✱ டாக்டர் பி.ரவிச்சந்திரன்

**செ**ன்னை புனித தாமஸ் மருத்துவமனையின் சிறுநீரகவியல் துறை தலைமை மருத்துவராகப் பணியாற்றும் டாக்டர் ரவிச்சந்திரன், சிறுநீரகவியல் துறையில் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். வைரஸ் நோயினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு 'ஹெர்பல் டையாலிஸிஸ்' எனும் புதிய நவீன மருத்துவ முறையைக் கண்டறிந்து உலகுக்கு வழங்கியவர். 'ஸ்டெம் செல் டெக்னாலஜி' மற்றும் 'உறுப்பு மாற்று அறுவை சிகிச்சை' ஆகியவற்றில் நிபுணத்துவம் வாய்ந்தவர்.



**மனித உடலில்
உற்ற தோழனாய்
செயல்பட்டு வரும் எங்களை
'மிஸ்டர் பீன்ஸ்' என்பார்கள்.**

கலந்து பதம் மாறிய பழச்சாறை ஃப்ரிஜ்ஜி லிருந்து எடுத்து அருந்திவிட்டு சோழிங்க நல்லூர் ஐ.டி. சாலையில் விரைவான்.

மதியம் பிசினஸ் லஞ்சில் வெறுத்துப் போய் பிஸ்ஸா, குக்கீஸ், பர்கர் என்று எதையாவது சாப்பிட்டுத் தொலைப்பான். இரவோ 'அம்மாஸ் ஃபாஸ்ட் ஃபுட்'டில் ஃபிரைட் ரைஸ், நூடுல்ஸ் எதுவானாலும், அதில் க்ளூகோமேட்டையும், இரசாயன உப்புகளையும் கொட்டி ஏதோ ஓர் எண் ணெயில் பொறித்துத் தருவார்கள். ஞாயிற் றுக்கிழமைகளைச் சமாளிக்க ரெடி மிக்ஸ் களை வாங்கிவந்து ஃப்ரிஜ்ஜில் அடைத்துக் கொள்வான். 'வேலைப் பளு, டார்கெட், மிரட்டும் ஷெட்யூல்' என்றாகி ஸ்ட்ரெஸ் சேர்ந்து கொண்டு பத்து நாள் தொடர்ந்து கிரானிக் லீவ் எடுத்ததில், கம்பெனியே அவனை கார்ப்பரேட் கிளப் ஒன்றில் காம்ப்ளிமெண்ட் உறுப்பினராக்கிவிட்டது.

அதன்பிறகு அடியோடு மாறிப் போனான். டிஸ்கொதே, பீர் இல்லாமல் அவன் ஃபிளாட்டுக்குத் திரும்பியதே இல்லை. இப்படித் தலைகீழாய் மாறிப் போன ராமின் வாழ்க்கை கடந்த ஞாயிற்றுக்கிழமை அன்று அதிர்ச்சி யோடு விடிந்தது. அன்று ராமின் காலைச் சிறுநீர் சந்தனத்தைத் தண்ணீரில் கரைத்த நிறத்தில் வெளியேறியது. அன்று முழுவதும் ஒரு மணி நேரத் துக்கு ஒருமுறை சிறுநீர் போய்க்கொண்டே இருந்ததில் கொஞ்சமாய்க் குழம்பினான். நிறைய கூல்ட்ரிங்ஸ் குடித்துப் பார்த்தான். மறுநாள் நிலைமை இன்னும் மோசமாகி அரை மணிக்கு ஒருமுறை சிறுநீர் வெளி யேறியதில் வெலவெலத்துப்போய், டீம் லீடர் கூட்டத்தின் தொடக்கத்திலேயே எஸ்கேப் - ஆக வேண்டிய நிலை.

இந்த இருபத்தெட்டு வயதில் ராம் இப்போதுதான் எங்களைப் பற்றி முதன் முறையாக நினைத்துப்பார்க்கிறான். அவசர அவசரமாக தனது லாப்டாப் கணிப் பொறியை உயிரூட்டியவன், கூகுல் தேடும் எந்திரத்துக்குள் நுழைந்து சிறுநீரகமும் பிரச்னைகளும் என்ற வார்த்தைகளை உள்ளீடு செய்ய, ஆயிரக்கணக்கான பக்கங்கள் வந்து திரையில் விழுந்தன. முதல் பக்கத்தை க்ளிக்கியதும் திரையில் எங்களின் முகம் தெரிந்தது. இரட்டை முகம். ராம் உடலின் உள்ளே அவனது உற்ற தோழர்களாகச் செயல்பட்டு வரும் எங்களை ஆங்கிலத்தில் 'மிஸ்டர் பீன்ஸ்' என்று செல்லமாய் அழைப்பார்கள். இன் னுமா எங்களைத் தெரியவில்லை? நாங்கள் தான் சிறுநீரகம்! பேசுகிறோம். இதயம், நுரையீரல் இரண்டுக்கும் இயங்கும் ஓசையுண்டு. ஆனால் இயல்பாகவே நாங்கள் சைலன்ட் டுவின்ஸ் மௌனம் தான் எங்கள் தாய் மொழி. ராம் கஷ்டப் படுவதைச் சகித்துக் கொள்ள முடியாமல் எங்கள் மௌனத்தைக் கலைத்து உங்க ளோடு பேச வருகிறோம். எச்சரிக்கை யோடு படிக்க ஆரம்பியுங்கள்.

**(இன்னும் பேசுவோம்)**

# கூத்து வாத்தியார்!

பாலு சத்யா




66 ஆண்டு மலர்

திருவிழாவைப் பார்க்காதவர்கள் யாராவது இருக்கிறார்களா? நிச்சயம் இருக்க முடியாது. தமிழ் நாட்டுத் திருவிழாக்கள் மக்களின் வாழ்க்கையோடு இரண்டறக் கலந்துவிட்டவை. ஆனால், இப்போதெல்லாம் திருவிழா என்றால் எதாவது ஓர் ஆர்கெஸ்ட்ராவை மேடையேற்றித் ஒப்பேற்றிவிடுகிறார்கள்.

ஒரு காலத்தில் இத்திருவிழாக்களில் நம் மண்ணின் கலைகள் முக்கிய இடம் வகித்தன. அவற்றுள் தெருக்கூத்தை மையமாக வைத்து, இயக்குநர் எஸ்.கருணா எடுத்திருக்கிற குறும்படம் 'ஏழுமலை ஜமா'.



ஏழுமலை, அந்தச் சுற்று வட்டாரத்தில் பேர்போன தெருக்கூத்துக் கலைஞர். அவர் எந்த வேஷம் கட்டி ஆடினாலும், விடியவிடிய கண் அயராமல் பார்த்து ரசிக்கும் ஊர் ஜனம். அந்த வருடம் கூத்துக்கு பதிலாக சினிமா போடுகிறார்கள். நொந்து போகிறார் ஏழுமலை. ஏழுமலையின் ஜமாவில் இருந்தவர்கள் எல்லாம், வேறு வேறு வேலைகளைப் பார்க்கப் போகிறார்கள். ஏழுமலையும் பிழைப்புக்காக பெங்களூருக்குப் போய், மார்க்கெட்டில் மூட்டை தூக்குகிறார். கூத்து 'வாத்தியார்!' என்று மரியாதையாக அழைக்கப்பட்ட ஏழுமலை, 'டேய் ஏழுமலை!' என்று அழைக்கப்படுகிறார்.

கூத்துக் கலையின் மேல் இருந்த வெறியில், திரும்ப ஊருக்கு வருகிறார் ஏழுமலை. சக கலைஞர்கள் எல்லாம் அவரை வேறு வேலை பார்க்கச் சொல்கிறார்கள். வெறுப்பும் வேதனையும் மனத்தில் மண்ட குடித்துவிட்டுத் தன்னந்தனியே ஆடுகிறார். ஏதோ ஓர் இடத்தில், வேறொரு கூத்துக் குழுவினர் இரவு நேரத்தில் ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அங்கு வரும் ஏழுமலை 'இப்பிடியா ஆடுவாங்க?' என்று திட்டிவிட்டு, சுழன்று ஆடிக்காட்டுகிறார். அப்படியே மயங்கி, சரிந்து கீழே விழுந்துவிடுகிறார்.

எழுத்தாளர் பவா. செல்லத்துரையின் 'ஏழுமலை ஜமா' சிறுகதையைத்தான், குறும்படமாக எடுத்திருக்கிறார் கருணா. புரிசை துரைசாமி, கண்ணப்ப தம்பிரான், ஆகியோரின் இசையும் சுரேவின் ஒளிப்பதிவும், பீ.லெனினின் எடிட்டிங்கும் இந்தப் படத்திற்கு வளம் சேர்த்திருக்கின்றன.

'பூம்பாவாய் ஆம்பல்... ஆம்பலி'ல் ரசிகர்கள் ஒருபுறம் சொக்கிக் கிடக்கிறார்கள். மற்றொருபுறம் உயிரை உரசும் உண்மைகளை, குறும்படங்கள் கட்டுத் தள்ளிக் கொண்டிருக்கின்றன. அதற்குச் சமீபத்திய உதாரணம் 'ஏழுமலை ஜமா.'

திருவல்லிக்கேணி நெரிசலில் –

கதை: படுதலம் சுகுமாரன்
படம்: ஜெயராஜ்

காப்பாத்துங்க... ஐயோ!

மவனே இன்னிக்கு நீ குளோஸ்.

# சி.ஐ.டி. விஷ்வா துப்பறியும் இறந்தவனைத் தேடி!

அவர்கள் ஒரு சந்துக்குள் நுழைந்த அதே சமயம்–

யாரோ ஒருவர் –

ஹலோ போலீஸ்... ம்... டி.எச். ரோட்ல ஒரு கொலை விழப் போகுது...

அவனை வெட்டிவிட்டு ஓட முயன்றபோது –


போலீசைப் பார்த்து எதிர்திசையில் ஓட....


மெயின் ரோட்டில் வேகமாக வந்த தண்ணி லாரியை அவன் கவனிக்க வில்லை...
METRO WATER


பயங்கர விபத்து...
ஆள் குளோஸ், சார்... முகம் உருக்குலைஞ்சு போச்சு...
சரி, ரெண்டு பாடியையும் வண்டில ஏத்துங்க! கேஸ் சரியா முடிஞ்சு போச்சு!


தினசரிகளில் மக்கள் செய்தி படித்தனர்...
தெய்வம் நின்று கொல்வதில்லை. அப்பவே கொன்னுடுது!
பட்டப் பகலில் வெட்டிக் கொலை! கொலையாளி உடனடி மரணம்!!


ஆறு மாதங்களுக்குப் பிறகு—
சி.ஐ.டி. விஷ்வா, தன் வீட்டில் –
ட்ரிங்... ட்ரிங்...
ட்ரிங்...


கமிஷ்னரா? குட்மார்னிங் சார்!
நேர்ல வரமுடியுமா?


பைக் பறந்தது...
என்ன திடீரென்று? என்னவாக இருக்கும்.


கமிஷனரின் அறை...
இந்த ஃபைலைப் பாருங்க விஷ்வா.
ம்... கொலை + விபத்து... ஞாபகமிருக்கு!


இதில் என்ன விசேஷம் இருக்குன்னு நினைக்கிறீங்க பாஸ்...?
ம்ம்... கேட்க மாட்டீங்க...? தி கிரேட் விஷ்வா வந்தாலே...


...விசேஷமும் வந்துடும். கொலைகாரனைத் தேடணும்...
செத்தவனையா...? குட் ஜோக்!
தொடரும்

## வாரம் ஒரு பாசுரம் 42

# எம் அடியார்கள்!

தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் இயற்பெயர் விப்ர நாராயணன். இவரது 'திருமாலை' 45 பாடல்களைக் கொண்டு அழகாகக் கட்டப்பட்ட மாலை போன்றது. வைணவத்துக்குச் சாதி வேறுபாடுகள் கிடையாது என்கிற கருத்தை ஆழ்வார் பாடல்களில் அடிக்கடி பார்க்கலாம். தொண்டரடிப் பொடியாழ்வார் அந்தணர். திருவரங்கத்துப் பெருமாளுக்கு அழகான திருப்பள்ளி எழுச்சிப் பாடினவர்.

பாவியேன் உன்னையல்லால்
பாவியேன்!

உன்னைத் தவிர இந்தப் பாவி வேறு யாரையும் நினைக்கமாட்டேன் என்று பாடும்போது ஆழ்வாருக்குச் சந்தேகங்கள் சில வருகின்றன; சில தீர்கின்றன.

நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ந்த அந்தணர்களை சதுர்வேதிகள் என்பார்கள். அதைத் தூய தமிழ்ப்படுத்



**ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட இந்தப் பாடல் சாதி வேறுபாடுகளைத் தகர்க்கிறது**

66ஆம் ஆண்டு மலர்

தும்போது சதுப்பேதி மார்கள் என்று அழைப் பார்கள். அவர்களை அழைத்து, 'இதோ பாரும் குலத்தில் தாழ்ந்தவர்களாக இருந்தாலும் எம் அடியார் கள் என்றால் அவர்களை நீங்கள் வணங்கலாம்; கொடுக்கலாம்; கொள்ள லாம் என்று சொல்லிவிட் டாயா, அரங்கனே!' என்று வியக் கிறார்.

*பழு(து)இலா ஒழுகல் ஆற்றுப்*
*பலசதுப் பேதிமார்கள்*
*இழிகுலத் தவர்களேலும்*
*எம்மடியார்கள் ஆகில்*
*தொழுமின்நீர் கொடுமின்*
*கொண்மின் என்றுநின் னோடும் ஒக்க*
*வழிபட அருளினாய்போல் மதிள்திரு*
*அரங்கத் தானே.*

எந்தச் சாதியாக இருந்தாலும் எம் அடியார்கள் என்றால் அவர்கள் எனக்கு ஒன்றே. அவர்களை நீங்கள் தொழலாம், அவர்களுக்குக் கொடுக்கலாம், அவர் களிடமிருந்து பெறலாம்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதப் பட்ட இந்தப் பாடல் சாதி வேறுபாடு களைத் தகர்க்கிறது. மறைபொருளாக 'திருப்பாணாழ்வரை உமது தோளில் ஏற்றிக் கொண்டு இங்கு வாரும்' என்று லோகசாரங்க முனிவராகிய அந்தணரை அரங்கநாதன் கட்டளை இட்டது குறிக் கப்படுகிறது என்றும் சொல்கிறார்கள்.

(படிக்கலாம்)



வெளிநாடுகளில் வேலை செய்பவர்கள் 'மனைவியையும் அழைத்துச் செல்லலாம்' என்று விசாவுக்கு விண்ணப்பித்தால், 'உங்கள் ஒரிஜினல் திருமணப்பதிவுச் சான்றிதழைக் கொண்டு வாருங்கள்' என்கின்றன வெளிநாட்டுத் தூதரகங்கள். விசாவுக்காக மட்டுமின்றி சொத்து, கருணை அடிப்படையில் வேலை, தகராறு ஏற்பட்டால் விவாகரத்துக்கு மனு செய்வதற்காக... என்று பல்வேறு தேவைகளுக்குத் திருமணப் பதிவுச் சான்றிதழ் இன்று தேவைப்படுகிறது. திருமணப் பதிவுச் சான்றிதழைப் பெறுவது எப்படி என்று பார்ப்போம்.

★ இந்துக்களிடையே நடக்கும் திருமணங்களைப் பதிவு செய்து திருமணச் சான்றிதழ் வாங்கவேண்டுமென்றால், நீங்கள் அணுக வேண்டியது, அருகிலுள்ள சார் பதிவாளர் அலுவலகம்.

★ அங்கே செல்லும் முன் நீங்கள் தயாராக வைத்துக்கொள்ள வேண்டிய ஆவணங்கள்:

மணமகன், மணமகள் இருவருடைய குடும்ப அட்டை, இருப்பிடத்தை நிரூபிக்கும் வகையில் ஒரு சான்றிதழ், கல்யாண

# இதயங்களை

அழைப்பிதழ், மண்டபம் வாடகை ரசீது, கூடவே கல்யாணத்துக்கு வந்திருந்த மூன்று நபர்கள் சாட்சிக் கையெழுத்துப் போடத் தேவை.

★ உங்கள் இருவரில் ஒருவரது வீடு அல்லது கல்யாணம் நடந்த மண்டபம் சம்பந்தப்பட்ட பதிவாளர் எல்லைக்கு உட்பட்டு அமைந்திருக்கவேண்டும்.

★ மண்டபத்தில் கல்யாணம் நடக்கும் போதே பதிவாளர் வந்திருந்து பார்த்து உடனே சான்றிதழ் தரவேண்டுமா? அதற்கும் அரசு ரெடி? கட்டணம் 110 ரூபாய் தான்!

★ சுயமரியாதை முறைப்படி திருமணம் செய்துகொண்டவர்களும் மேலே சொன்ன ஆவணங்களுடன், திருமணத்தை நடத்தி வைத்தவரின் கடிதத்துடன் மனு செய்ய வேண்டும்.

★ திருமணம் முடிந்து எத்தனை வருடங்களானாலும் மேலே சொன்ன ஆவணங்களை வைத்துப் பதிவுச் சான்றிதழ் பெற்றுக்கொள்ள முடியும். மூன்று சாட்சிகளை ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும்.

★ இந்துக்கள், கிறித்துவர்கள், முஸ்லீம்கள் ஆகியோருக்குத் தனித்தனித் திருமணச் சட்டங்கள் இருக்கின்றன.

★ கிறித்துவர்களுக்கென்று தனித் திருமணப் பதிவாளர்கள் இருக்கிறார்கள். தேவாலயத்தில் முறைப்படி திருமணங்களை இவர்கள் பதிவு செய்துகொள்வார்கள். ஆனாலும், சார் பதிவாளர் அலுவலகத்தில்தான் சான்றிதழ் பெற வேண்டும்.

★ முஸ்லிம் நிக்காஹ் நடத்தி வைத்து பதிவு செய்பவர் பள்ளிவாசலில் உள்ள மௌல்வி. அதற்கும் சார் பதிவாளரிடம்தான் சான்றிதழ் பெறவேண்டும்.

★ மதங்களைக் கடந்து நடக்கும் திருமணங்களும் சிறப்புத் திருமணச் சட்டத்தின் கீழ்தான் நடந்தி வைக்கப்படுகின்றன. இதன்படி கல்யாணம் செய்துகொள்ள விரும்பும் ஆண் - பெண் இருவரும் முதலில் பதிவாளர் முன் மனு தாக்கல் செய்ய வேண்டும். பதிவாளர் அவரது நோட்டீஸ் போர்டில் 'இந்தத் திருமணத்துக்கு ஆட்சேபணை உள்ளவர்கள் தெரிவிக்கலாம்' என்று அறிக்கை ஒட்டிவிடுவார். சரியாக முப்பது நாட்களுக்குள் எந்த எதிர்ப்பும் வராமல் இருந்தால், அடுத்த இரண்டு மாதங்களுக்குள் பதிவாளர் முன்னரே மாலை மாற்றிக் கொண்டு, பதிவுச் சான்றிதழைக் கையோடு பெற்றுக் கொள்ளலாம்.

★ அகதிகள் முகாமில் உள்ள அகதிகளும் திருமணம் செய்துகொண்டு சான்றிதழ் வாங்கலாம். ஏற்கெனவே சொல்லப்பட்ட ஆவணங்களுடன் போலீஸ் க்ளியரன்ஸ் சான்றிதழைப் பெற்று விண்ணப்பிக்க வேண்டும்.

– கௌசி





# இணைக்க...



"அசிஸ்டண்ட் டைரக்டரோட வேலை படம் தொடங்கறதுக்கு நாலு மாசத்துக்கு முன்னாடியே ஆரம்பிச்சுடும். டிஸ்கஷன்ல உட்காருவோம். புரொடியூசர் போடற ரூம்ல சாப்பிட்டு, தூங்கி, கதை விவாதம் பண்ணி, ஷூட்டிங் போகறதுக்கு முன்னாடி பக்காவான ஸ்கிரிப்ட் பண்ணி முடிச்சிடுவோம்.

ஷூட்டிங் போயிட்டா எங்க உலகமே மாறிடும். ஒரு டைரக்டருக்கு அஞ்சு உதவி இயக்குநர்கள் இருந்தா, அஞ்சு பேருக்கும் தனித்தனியா வேலை பிரிச்சுக் கொடுத்துடுவாங்க.

ஒருத்தன் காஸ்ட்யூம் கண்டினியூட்டி பார்க்கணும். ஒருத்தன் க்ளாப் அடிக்கணும். இன்னொருத்தன் எடிட்டிங் ரிப்போர்ட் எழுதணும். அடுத்தவன் லொக்கேஷன் இன்சார்ஜ். இப்படிப் பிரிச்சுக்கிட்டு வேலை பார்ப்போம். டைரக்டர், ஹீரோ, எல்லோரும் வர்றதுக்கு முன்னாடி மொத ஆளா ஸ்பாட்ல நிக்கறதும் அசிஸ்டெண்ட் டைரக்டர்தான்; கடைசியா ஸ்பாட்ட விட்டுப் போகறதும் நாங்கதான். அன்னைக்கு

"சேவல் கூவறதுக்கு முன்னாடி எழுந்திரிச்சு, மறுநாள் அதே சேவல் கூவறதுக்கு முன்னாடி தூங்கப் போறவன்தான் உதவி இயக்குநர்" என்று எடுத்த உடனேயே டாப் கியரில் ஆரம்பித்தார் சிவமணி. எட்டு வருடங்களாகப் பல்வேறு இயக்குநர்களிடம் பயிற்சி பெற்று இயக்குநராகும் முயற்சியில் இருப்பவர்.

# கிளைச்சாலை – 1

# நாலு வருஷம் வாழ்ந்த திருப்தி!

என்ன காட்சி எடுக்கப் போறோம், எங்க வச்சி எடுக்கணும், டயலாக்கை இன்னும் எப்படியெல்லாம் டெவலப் பண்ண லாம்னு பல விஷயங்கள் பத்திப் பேசு வோம். நிர்ணயிக்கப்பட்ட நேரத்துல ஷூட்டிங் ஆரம்பமாகிப் பரபரப்பா ஒர்க் பண்ண ஆரம்பிச்சிடுவோம்.

ஹீரோ சரியா பண்ணல, நேரத்துக்கு வரலைன்னாலும் டைரக்டர்கிட்ட திட்டு வாங்கறதும் நாங்கதான்; வேற யார் எதுனா பண்ணாலும் கொட்டு வாங்கறதும் நாங்க தான். ஆனா, அதையெல்லாம் நாங்க பெருசா மூளைல ஏத்திக்கிட்டு வேதனைல உழல மாட்டோம். ஏன்னா எந்த டைரக் டரும் தன்னோட அசிஸ்டெண்ட்டுகள வேணும்னே திட்ட மாட்டாங்க. ஏதோ இயலாமைலதான் எங்கமேல கோபத்தை வெளிப்படுத்துவாங்க. ஆனா, ஷூட்டிங் முடிஞ்சதும் வந்து 'மனசுல வச்சுக் காதப்பா'ன்னு எங்க மனசைத் தொட்டுடு வாங்க.

ஹீரோ, ஹீரோயினுக்கு வேணா ஷூட்டிங் ஸ்பாட்ல சாப்பாடு கொஞ்சம் தடபுடலா இருக்கும். மத்தபடி டைரக்டர் உட்பட எல்லாருக்கும் ஒரே மாதிரி, ஒரே விதமாத்தான் லஞ்சோ, மத்த எதுவுமோ இருக்கும். எங்களுக்கு எல்லார்கிட்டயும் நல்ல மரியாதை கிடைக்கும். புரொடியூசர் லேர்ந்து கடைநிலை ஊழியர் வரைக்கும் 'சார்'னுதான் கூப்பிடுவாங்க. டைரக்ஷன் ஃபீல்டுக்கு அவ்ளோ மதிப்பு. அசிஸ் டெண்ட் டைரக்டர்ஸ்குள்ள நல்ல அண்டர் ஸ்டாண்டிங் இருந்தா போதும்; எல்லாமே ஸ்மூத்தா போகும்.

அதே நேரத்துல எவ்வளவு மரியாதை உண்டோ, அவ்ளோ சம்பள விஷயத்துல மோசமா நடந்துக்குவாங்க. தினமும் ஷூட்டிங் முடிஞ்சா பேட்டா தருவாங்க. சமயத்துல அதைக்கூட எங்களுக்குத் தர மாட்டாங்க. இல்ல அதிக பட்சம் இருபது ரூபா கொடுப்பாங்க. எதுவும் கேக்க முடியாது. கேட்டா எதிர்காலம் காலி. ஒரு சில நல்ல இயக்குநர்கள் மட்டும்தான் அசிஸ்டெண்ட்டுகளுக்காகப் போராடி எல்லாத்தையும் பெற்றுத் தருவாங்க.

மத்தபடி அரட்டை, ஜாலின்னு ரொம்ப ஜோவியலா பொழுது போகும். ஆனா குடும்பம், குட்டியெல்லாம் மறந்துட்டு வேலை பார்க்கணும். பல நாட்கள் ஷூட்டிங் முடிஞ்சு பஸ் கிடைக்காம ஆபீஸ் லேயே படுத்துட வேண்டியது வரும். சகிச்சுட்டு செய்ய வேண்டியதுதான். ஊர்ல சிலர் ரொம்ப வசதியானவங்களா இருப் பாங்க. ஆனா, அங்கீகாரத்துக்காக வேண்டி இங்க வந்து கஷ்டப்பட வேண்டி இருக்கும். ஆனா, அதைக்கூட சந்தோஷமாத்தான் எடுத்துப்போம். செல் போன் யூஸ் பண்ணா அடிதான் விழும். வேலைய கெடுக்கும்னு டைரக்டரே ஆஃப் பண்ணச் சொல்லிடுவாரு. இதனால அவசரத்துக்குக்கூட எதுவும் பண்ண முடியாது. கூட்டத்தை விலக்கி விடுறதிலும் பயங்கர ரிஸ்க் இருக்கு. ஷூட்டிங் பார்க்கத் துடிக்கறவங்கள என்ன சொன்னாலும் தடுக்க முடியாது. ரொம்ப சொன்னாலும் நம்மையே அடிக்க வருவாங்க. தடுக்கலைன்னாலும் டைரக்டர் வாய்ல நிக்க முடி

படம் போகலேன்னா, ரொம்ப நெர்வஸாயிடுவோம். ஆனா, சுருண்டு போயிட மாட்டோம். இன்னொரு யுத்தத்துக்குத் தயாராவோம். நம்மால தனியா படம் பண்ண முடியும்னு



**படம் ஓடினா நல்ல எதிர்காலம் எல்லார்க்கும். சரியா போகலேன்னா சுருண்டுபோயிட மாட்டோம் அடுத்த யுத்தத்துக்குத் தயாராயிடுவோம்.**

யாது.

அதே மாதிரி தமிழ் தெரியாத ஹீரோயின்கூட போராடுறதும் பெரிய இம்சை. டயலாக் சொல்லித் தர்றதுக்குள்ள தொண்டைத் தண்ணி வத்திடும். ஆனா, ஒரே ஒரு நன்மையும் இருக்கு. ஹீரோ, ஹீரோயின்களுக்கு டயலாக் சொல்லித் தரும்போது அவங்க ஸ்நேகம் கிடைச்சா பெரிய விஷயம். நல்ல கதை இருந்தா சொல்லி, வாய்ப்புக் கேட்போம். இப்படி நிறைய பேர் மேல வந்திருக்காங்க.

ஷூட்டிங்கோட எங்க பணி முடியறதில்ல. அடுத்து போஸ்ட் ப்ரொடக்‌ஷன் ஒர்க். எடிட்டிங், ரீ-ரிக்கார்டிங், டப்பிங், எஃபெக்ட், சி.ஜின்னு (Computer Graphics) பல வேலை செய்வோம். முன்ன மாதிரியே ஆளுக்கு ஒரு வேலையா பிரிச்சிப்போம். டைரக்டர் மனசு கோணாம பண்றதுதான் எல்லாத்துலயும் பெரிய வேலை. படம் ரிலீஸானதும் தியேட்டர், தியேட்டரா போய் ரிப்போர்ட் தரணும். படம் ஓடினா நல்ல எதிர்காலம் எல்லாருக்கும். டைட்டில் கார்டுல எங்க பேரைப் பார்க்கும்போது பட்ட கஷ்டமெல்லாம் பறந்தோடிப் போயிடும். நூறு வருஷம் வாழ்ந்த திருப்தி கிடைச்சிடும். சரியா நம்பிக்கை வந்தாச்சன்னா, டைரக்டர் கிட்டருந்து அவரோட ஆசியோட வெளில வந்துடுவோம்; வரணும். அப்பத்தான் அந்த இடத்துக்கு இன்னொருத்தன் வர முடியும். நாமளும் வழி விடணும். பல நேரங்கள்ல டைரக்டரே நல்ல வாய்ப்பு வந்தா சொல்லுவாரு. இல்லன்னா நாமளே நல்ல ஸ்கிரிப்ட் ரெடி பண்ணி தேடலைத் துவக்க வேண்டியதுதான். முயற்சிகள் உடனேவும் கைக்கூடலாம். பல வருஷமும் ஆகலாம். தளராம உழைக்கணும். நம்பிக்கை - இதுதான் உதவிஇயக்குநர்களோட தாரக மந்திரம். இதைத்தான் தினமும் சாப்பாட்டோடு சேர்த்துச் சாப்பிட்டுட்டிருக்கோம்.''

- கனவுகளோடுச் சொல்லி முடிக்கிறார் சிவமணி.

சந்திப்பு: **மு.மாறன்**
படங்கள்: பொள்ளாச்சி சுந்தரம்

# ஒரு குடும்பம் இரு இணைவேந்தர்கள்!

சென்னை மாநகராட்சியின் மேயர், மாமன்றக் கூட்டம் நடக்கும் போது மேயருக்குரிய உடை, பொற் பதக்கம் பொருத்தப்பட்ட பொற்சங் கிலி அணிந்து மேயருக்குரிய கம் பீரமான ஆசனத்தில் அமருவதை தொலைக்காட்சியிலும், புகைப்படங் களிலும் பார்த்திருப்பீர்கள். அவற்றைத் தமது சொந்த செல வில் உருவாக்கி, மாநகராட்சிக்கு வழங்கியவர் சென்னை மாநக ராட்சியின் முதல் மேயரான டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார். தமிழர் நினைவில் வாழும் இந்த நல்லவருக்கு ஆகஸ்ட் ஐந்தாம் தேதியோடு 103 வயசு பூர்த்தியாகிறது.



1936ல் அமைந்த சென்னை மாநில அமைச்சரவையில் கல்வி அமைச்சராக இருந்தபோது முத்தையா செட்டியார், சென்னை பல்கலைக் கழகத்தின் இணைவேந்தராகவும் செயல்பட்டார். அதேசமயத்தில் அவருடைய தந்தை ராஜா சர் அண்ணாமலை செட்டியார், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தின் இணைவேந்தராக இருந்தார். இப்படி தந்தையும், மகனும் இரு வேறு பல்கலைக் கழகங்களின் இணைவேந்தர்களாகப் பணியாற்றி யது அரியதொரு நிகழ்வாகும். ராஜா சர் முத்தையா செட்டியார் கால கட்டத்தில்தான் அண்ணாமலை பல்கலைக் கழகம் சட்டம், வேளாண்மை, பல் மருத்துவம் என்று பல புதிய துறைகளிலும் கால் பதித்தது.

தமிழ் மொழி மற்றும் தமிழ் இசை வளர்ச்சியில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் முத்தையா செட்டியார். தமிழிசையை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் ஆண்டுதோறும் சென்னை ராஜா அண்ணாமலை மன்றத்தில் இசை விழா நடத்தி னார். அப்போது நாடெங்குமிருந்து ஓதுவார்களையும், இசைவாணர்களை யும் வரவழைத்து, பண் ஆராய்ச்சியை மேற்கொள்ளச் செய்தார். மதுரை யில் இவரால் நிறுவப்பட்ட மதுரை தமிழ்ச் சங்கம் 2000 ஆம் ஆண்டில் வெள்ளி விழா கொண்டாடியது.

ராஜா சர் அண்ணாமலை செட்டியார் நினைவு அறக்கட்டளை, ஆண்டுதோறும் ராஜா சர் முத்தையா செட்டியார் பிறந்த நாளன்று, (ஆகஸ்ட் 5) சிறந்த தமிழ் அறிஞர் ஒருவருக்கு ஒரு லட்சம் ரூபாய் பரிசளித்து கௌரவித்து வருகிறது. 1988 ஆம் ஆண்டு முதல் அளிக்கப்பட்டு வரும் இந்தப் பரிசு பெற்றவர்களின் பட்டியலில் தண்டபாணி தேசிகர், ம.பொ.சி, அ.சா.ஞா. மீ.ப.சோமு, கணபதி ஸ்தபதி, க.ப.அறவாணன், சிற்பி பாலசுப்ரமணியன் எனப் பலரும் அடங் குவர்.

– மௌலி

# கரன்சி விளைகிறது

முள்ளில்லா மூங்கில். நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? நமக்கு இது ரொம்பவே புதுசு.

இதுவரை நமக்குத் தெரிந்ததெல்லாம் முள் நிறைந்த நாட்டு மூங்கில்களே. மத்திய அரசின் வனத்துறை ஆராய்ச்சிப் பண்ணையினர், திசு வளர்ச்சி மூலமாக உருவாக்கப்பட்ட முள்ளில்லா மூங்கில் நாற்றுச் செடிகளை, உற்பத்தி செய்து தருகின்றனர். மானாவாரிக் காடுகள் மற்றும் தோட்டங்களில் மண்டி வளரக்கூடிய இவ்வகை மூங்கில், ஒவ்வொரு முறை மூங்கில் மரம் வெட்டும் போதும் அள்ளித் தர இருப்பதோ மிகப் பெரிய வருவாய்.

மத்திய அரசின் வனத்துறை, தமிழகத்தில் மாவட்டத்துக்கு ஒரு விவசாயி விகிதம் தேர்வு செய்து, முள்ளில்லா மூங்கில் உற்பத்திச் சாகுபடியை அறிமுகப்படுத்தி வருகிறது. அப்படி கரூர் மாவட்டத்தில் மயிலாடும்பாறை கிராம விவசாயி என்.சண்முகம், முள்ளில்லா மூங்கில் உற்பத்திச் சாகுபடியாளராகச் செயல்பட்டு வருகிறார்.

அவரது பதினான்கு ஏக்கர் மானாவாரிக் காட்டில் சாகுபடி செய்திருக்கிறார். ஓர் ஏக்கருக்கு நூற்றறுபது கன்றுகள்; ஒரு நாற்று முப்பது ரூபாய். செப்டம்பர்-அக்டோபர் மாதங்களில் நடலாம். ஆனால் இவர் கடந்த மார்ச் மாதமே நட்டுவிட்டார். தற்போது ஐந்து மாதச் செடிகளாக அவை வளர்ந்து நிற்கின்றன.

பல ஆண்டுகளாக மாட்டு மேய்ச்சலுக்குக் கூடப் பயன்படாமல் இருந்து வந்த கரம்புக்காடு. அந்தக் கரம்புக் காட்டில் அறுநூறு அடி ஆழத்துக்கு ஆழ்துளை போர்வெல் இறக்கப்பட்டுள்ளது. ஜெட் மோட்டார் மூலமாகத் தண்ணீர் பெறப்படுகிறது. மின் வழிப்பாதை அருகில் இல்லாததால் டீசல் எஞ்சின் வாயிலாகவே தண்ணீர் பாய்ச்சப்படுகிறது.

க்ருஷிகேர் பயோ இன்புட்ஸ் நிறுவனத்தினர், கேபி ட்ரிப் எனப்படும் சொட்டு நீர்ப்பாசன முறையினை இங்கு செயல்படுத்தியுள்ளனர்.

"குழி ஒன்றுக்கு ஐந்து கிலோ சாண

**ஒரு முறை மூங்கில் நாற்று நட்டால் போதும். நூற்றைம்பது ஆண்டுகளுக்குத் தொடர்ந்து மூங்கில் மரம் அறுவடை செய்யலாம்.**



எரு, இரண்டு கிலோ மண் புழு உரம், இருநூறு கிராம் வேப்பம் புண்ணாக்கு போன்றவற்றை அடியுரமாக இட வேண்டும்.

ஒரு தூரிலிருந்து குறைந்தது பதினைந்து மரங்கள் கிளைத்து வரும். மூங்கில் மரம் முதிர்ச்சி அடைய அடைய, நான்காவது வருடத்திலிருந்து வெட்டிக் கொண்டே இருக்கலாம். வெட்ட வெட்ட தூரிலிருந்து புதிதுபுதிதாக மூங்கில்கள் வெளிக்கிளம்பும். ஒரு முறை மூங்கில் நாற்று நட்டால் போதும்; குறைந்தபட்சமாக நூற்றிருபது ஆண்டுகளுக்கும், அதிகபட்சமாக நூற்றைம்பது ஆண்டுகளுக்கும் தொடர்ந்து மூங்கில் மர அறுவடை செய்து

# கல்லாங்காட்டில்...





கொண்டேயிருக்கலாம்.

மிக உயர் ரக காகிதங்கள் தயாரிக்க, அழகிய கைவினைப் பொருட்கள் உருவாக்க, வெளிநாடுகளில் எழில்மிகு மூங்கில் மர வீடுகள் வடிவமைக்க, துணி உற்பத்திக்காக மூங்கில் இழை நூல் தயாரிக்க, டாலர் நோட்டு உட்பட வெளிநாட்டுக் கரன்சி நோட்டுகள் தயாரிக்கவும் முள்ளில்லா மூங்கில் மரங்கள் பயன்படுகின்றன. எனவே, உலகம் முழுவதுமாக எல்லா நாடுகளுக்கும் முள்ளில்லா மூங்கில் மரங்களின் தேவை மிகவும் அதிகரித்துள்ளது'' எனக் கூறுகிறார் மத்திய அரசு வனத் துறையின் உயர் அதிகாரி.

''எங்க நிலத்துல சோளம், கம்பு, கேழ்வரகுன்னு நானும் மாத்தி மாத்தி போட்டுப் பார்த்தேன். ஒண்ணுமே சரியா வரலை. செம்மண் பூமி; கரம்புக்காடு. இதுல கல்லுங்கதான் அதிகம். ஊர்ல கல்லாங்காடுன்னு சொல்வாங்க. இந்தக் காட்டை மாத்திக் காட்டணும்னு 'சேலஞ்ச்' எடுத்துத்தான் பண்ணி வர்றேன். அதுக்காக இதை மூங்கில் தோட்டமா மாத்திட்டு வர்றேன். நாலு வருஷம் கழிச்சுத்தான் பலன் தரப் போகுது. இருந்தாலும் நான் நம்பிக்கையோட காத்திருக்கேன்!'' என்கிறார் மயிலாடும்பாறை கிராம விவசாயி என்.சண்முகம்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# கிரீடம்

மலையாளத்தில், இயக்குநர் லோகிதா தாஸ் செய்த படம். மகனை போலீஸாக்கத் துடிக்கும் அப்பா; அவனோ கைதிகளின் வாண்டட் லிஸ்ட்டில் இடம்பெற்றுவிடுகிறான் என்கிற ஒன் லைனை வைத்து உணர்வுப் போராட்டத்தை நம் கண்முன் நிறுத்தியிருக்கிறார்கள்.

ஹெட் கான்ஸ்டபிளாக வரும் ராஜ்கிரண், மிடில் கிளாஸ் தந்தையை அப்படியே பிரதிபலிக்கிறார். மகனைத் தன் கைக்குள் வைத்து வளர்ப்பதாகட்டும், கனவை உயிர்ப்பிக்கத் துடிப்பதாகட்டும்... நேர்த்தியான நடிப்பு!

அப்பாவுக்குத் தப்பாத பிள்ளையாக அஜீத். வீட்டை விட்டு வெளியேற்றியும் 'எங்கேம்மா போவேன்' என்று பொங்கும் போது நம்முள் ஏதோ ஒன்று முறிகிறது. 'ஒரு பொண்ணு, ஒரு பையன்' என்று த்ரிஷாவிடம் தம்மை வெளிப்படுத்தும் போது காதுக்குள் காதல் ரீங்காரம். 'நான் ரௌடி இல்ல' என்று ஆக்ரோஷமாய் அலறும்போதும், க்ளைமாக்ஸில் தன்னையே இழந்து கதறும்போதும் அஜீத்தின் இன்னொரு பரிமாணம் அப்பட்டமாய் வெளிப்படுகிறது.

த்ரிஷாவின் குறும்புக் காட்சிகள் அத்தனையும் கரும்பு. வாட்டர் டேங்குக்குள் அமர்ந்து குடும்பத்தை வம்பளக்கும் சீனில் வெளுத்து வாங்குகிறார். விவேக், சந்தானம், சத்யன், ஹனீபா என ஒவ்வொருவரும் காமெடி ராஜ்ஜியமே நிகழ்த்தியிருக்கின்றனர். சரண்யா, மீனாகுமாரி, பாட்டி, இன்ஸ்பெக்டர் என்று சோடை போகாத உணர்வுகள் எல்லோரிடமும்.

ஜி.வி. பிரகாஷின் இசை, கதையோடு கலந்த கனிவு. ஆர்.ஆரில் மிரட்டி, 'விழியில்' பாடலில் உருக வைக்கிறார். இதுவரை பாடல்களில் மட்டும் நம் மனம் வருடிய நா.முத்துக்குமார், இதில் வசனத்திலும் விஜய்யுடன் இணைத்து வஞ்சனையில்லாமல் வாரி வழங்கியிருக்கிறார்.

திருச்சியின் சந்துபொந்தெல்லாம் புகுந்து புறப்படும் திருவின் கேமரா, அழகின் அடுத்த பக்கத்தை அம்சமாய்க் காட்டுகிறது. ஆண்டனியின் எடிட்டிங், படத்தைக் கச்சிதமாய் நகர்த்துகிறது.

அழுத்தமாகக் கைகுலுக்க வேண்டியவர் டைரக்டர் விஜய். அப்பாவுக்கும் மகனுக்குமான உணர்வுப் போராட்டத்தை ரத்தமும் சதையுமாகச் சொல்லியிருக்கும் நேர்த்திக்குப் பூங்கொத்து. முதல் படத்திலேயே அஜீத்தை உயர்த்திவிட்டார் விஜய்!

- மனஸ்வினி



திருமண பட்டுச் சேலைகளின் கைராசியான ஸ்தாபனம்




மயிலாப்பூர்

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ்

காஞ்சிபுரம் பட்டுச் சேலைகளுக்கு முகூர்த்தம் மற்றும் திருமண கால சலுகை



- சில்க் காட்டன் சேலைகள்
- சுங்கடி காட்டன் சேலைகள்
- எம்ப்ராய்டரிங் சேலைகள்
- பேன்ஸி சுடிதார்கள்

**50%** காஞ்சிபுரம் திருமண பட்டுச் சேலைகளுக்கு வரவேற்புச் சேலைகளுக்கும் **தள்ளுபடி** விற்பனை

**பழைய காஞ்சிபுரம் பட்டு ஜரிகை சேலைகள்**
**குறைபாடு நிலையிலும் எக்ஸ்சேஞ்ச் செய்யப்படும்**

## ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ் TM

எண். 13/7, வடக்கு மாட வீதி, (அடி தளம்),
கபாலீஸ்வரர் கோவில் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன்: 044 - 24933097, 24610444

**MASTER & VISA CARDS ACCEPTED**

# JAI TOURS

எண்.5, முதல் மெயின் ரோடு, அரும்பாக்கம், சென்னை - 106
**Ph: 044 - 24756202, 93805 37352**

**August 11 - 15** ஆடி **Spl** + நவகிரக ஸ்தலங்கள் : ( நவகிரக ஸ்தலங்கள் 9 ) அம்மன், திருமெய்ச்சூர், கூத்தனூர், திருக்கடையூர், காரைக்கால், பிரத்தியங்கர தேவி, பட்டீஸ்வரம் மற்றும் மயிலாடுதுறை, ஆனந்தமங்களம், நன்னிலம், திருகண்டி, நாச்சியார் உப்பிலியப்பன், குடந்தை (தங்கும் வசதி, பஸ், இரயில் கட்டணம் உட்பட) Rs. 1,200/-

**Sep - 9th** பிரதோஷம் **Spl** : 1 நாள்
காஞ்சிபுரம் ( சிவஸ்தலங்கள் ) மாகரல், குரங்கணி முட்டம்) Rs. 350/- ( சாப்பாடு தனி )

**Oct - 7th** புரட்டாசி **Spl** : 1 நாள் காஞ்சிபுரம் ( 22 ) வைணவஸ்தலங்கள், ஆப்பூர் பெருமாள் & திருமலைவையாவூர் Rs. 350/- ( சாப்பாடு தனி )

**Nov - 11th** கந்தசஷ்டி **Spl** 1 நாள்
குமரக்கோட்டம், உத்திரமேரூர், நடு பழனி, மயிலம், ஆறுப்படையப்பன் Rs. 400/- ( சாப்பாடு தனி )

**Dec - 7th to 14th :** பத்ராசலம், பர்ணசாலா, யாதகிரி, பாசார் ( சரஸ்வதி, சிலுக்கூர் பெருமாள், நாகர்ஜுன சாகர் ) ஹைதராபாத், குண்டால், அதிலாபாத் ( நீர் வீழ்ச்சி ) Rs. 3500/-
இரயில் கட்டணம், பஸ், தங்கும் வசதி, சாப்பாடு தனி )

**Dec - 22nd to 29th** அந்தமான் தீவு ( சாப்பாடு, சுற்றிப்பார்க்கும் செலவு தங்கும் வசதி, பஸ், விமான கட்டணம் உள்பட ) Rs. 22,500/- (**September**-குள் முன் பதிவு செய்பவர்களுக்கு மட்டும்)

## ஆசிரியர் பக்கம்

# நிறுத்துங்கள் இந்தப் பாதகத்தை!



பாலியல் விளக்கப் பாடம் நடத்தும் போர்வையில் கழிவறைக் காட்சியைப் பிரசுரிக்கத் துணிந்திருக்கிறது ஒரு தமிழ்ப் பத்திரிகை. அதிலும் ஒரு சின்னஞ்சிறு பிள்ளையைச் சித்திரித்திருக்கும் கொடுமையைத் தட்டிக் கேட்க, இந்தத் தமிழ்நாட்டில் இதுவரை ஒருவர்கூட முன்வரவில்லை என்கிறபோது, காட்சியின் அதிர்ச்சியை விஞ்சுகிறது வேதனை!

பாலியல் தொழிலாளர்களின் துன்பங்கள் என்ற பெயரில் பாலியல் வக்கிரங்களை விவரிப்பது; பாலியல் கல்வி என்ற பெயரில் விபரீதப் போக்குகளைப் பற்றி விரிவாக எழுதுவது; தனி நபர்களின் உண்மை சொரூபத்தை வெளிப்படுத்துகிறேன் பேர்வழி என்று பாலியல் விவரணைகளை எழுதுவது; பாலியல் பலாத்கார செய்திகள் என்ற தலைப்பில், பாதிக்கப்பட்ட பெண்களை வார்த்தைகளால் மீண்டும் அதே கொடுமைக்கு உட்படுத்துவது - என்று கடந்த சில ஆண்டுகளாகவே தமிழ்ப் பத்திரிகை உலகம் சமூகத்துக்கு அரிதான சேவை செய்து வந்திருக்கிறது! அந்த வரிசையில் குழந்தைகளை விட்டு வைப்பானேன் என்று இப்போது ஒரு பாவமும் அறியாத தளிர்களை இழுத்துப்போட்டுத் தொடர் எழுதி வருவது பாதகமன்றி வேறென்ன?

சிறுவர் - சிறுமியருக்கும் பாலுணர்வு உண்டு, அதனை பெற்றோர் அறிந்துகொண்டு, அரவணைத்து உரிய நேரத்தில் கவனமும் வழிகாட்டலும் தந்து அவர்களை வளர்க்க வேண்டும் என்று உணர்த்துவதே நோக்கமெனில், அதை உரிய மருத்துவநிபுணரின் மூலமாக, நாசூக்காக ஒரே கட்டுரையில் சொல்லிவிட்டுப் போகலாம். அதற்குப் பதிலாக ஒரு தனிநபரின் பாலியல் பார்வை வாராவாரம் ஒட்டுமொத்த தமிழக பெற்றோர் மீதும் திணிக்கப்படுவது என்ன கொடுமை! இதில் இடையே வாசகர்களிடம் கருத்துக் கணிப்பு வேறு நடத்துகிறார் கட்டுரையாளர்! எதைத்தான் வாசகர்களிடம் கேட்பது என்று விவஸ்தை கிடையாது...?

**அதன் பிறகு நம் குழந்தைகளுக்கு என்ன பாதுகாப்பு...? யார் பாதுகாப்பு...?**

பெற்றோர்கள் எல்லோருமே குழந்தைகளாக இருந்து வளர்ந்து பெரியவர்களானவர்கள்தான். அவர்களுக்குத் தங்கள் குழந்தைகளை வழிநடத்திச் செல்லத் தெரியும். அப்படி வழிநடத்திச் செல்லவேண்டியதன் அவசியத்தை ஞாபகப்படுத்தினாலே போதும். மாறாக, குழந்தைகளை மையப்படுத்தி இப்படி ஒரு தொடர் எழுதுவதன் மூலம் பெற்றோரின் சங்கடங்கள் தீராது; அதிகம்தான் ஆகும். அதற்கும் மேலான ஆபத்து: ஏற்கெனவே பேதலித்துப் போயிருக்கும் இந்தச் சமுதாயம், குழந்தைகளையே பாலியல் சின்னங்களாகப் பார்க்கத் தூண்டப்படும். அதன் பிறகு நம் குழந்தைகளுக்கு என்ன பாதுகாப்பு? யார் பாதுகாப்பு?

வளர் இளம் பருவம் என்பது, அவரவரது அழகான அந்தரங்கம். அதைப் பத்திரிகை என்ற பொதுவிடத்தில் சந்தைப்படுத்தி, கொச்சைப்படுத்தி, குழந்தைகளின் கௌரவத்துக்கு இழுக்கு செய்யும் பாதகத்தை உடனே நிறுத்துங்கள் - ஏனெனில், இது ஏதோ அறிந்தும் அறியாமல் செய்யப்படுகிற பிழை அன்று... திட்டமிட்ட கொடுமை! ○

# இல்லை... இல்லை... இல்லை... ஆனாலும்...




நம்ம ஊருல தயிர், மோர் எல்லாத்தையும் தெருத் தெருவா கூவி வித்துக்கிட்டுப் போவாங்க. ஆனா, சாராயத்தை ஊர்ல எந்த மூலையில வெச்சு வித்தாலும், தேடிக்கொண்டு போய் வாங்கி சாப்பிடுவாங்க. அதேபோல, கொஞ்சமா ஜனங்க கூடி நின்னு வேடிக்கை பார்த்தால், அங்க ஏதோ நல்ல காரியம் நடக்குதுன்னு அர்த்தம். ஆனால், இங்கே நல்ல காரியம் நடக்குது; அதே சமயம் நிறைய பேரும் கூடி இருக்காங்க. பார்க்கவே மனசுக்கு சந்தோஷமா இருக்கு. இன்றைக்குப் பத்திரிகை நடத்துவது சிரமமான காரியம். பத்திரிகைகூட ஷாம்பூ, மசாலா பொடின்னு இலவசமா கொடுத்தாத்தான் விற்கும்; ஆனா, ராம கிருஷ்ண விஜயம் பத்திரிகையில இலவசம் இல்லை; அரசியல் பரபரப்பு இல்லை, சினிமா இல்லை. ஆனாலும் அதன் விற்பனை ஒரு லட்சம் பிரதிகளைத் தாண்டி இருக்குதுன்னா உண்மையிலேயே அது ஒரு சாதனைதான்'' என்று குறிப்பிட்டார் தென்கச்சி சுவாமிநாதன். சென்னை ராமகிருஷ்ண மடம் வெளியீட்டு வரும் ஆன்மிக பண்பாட்டு மாத இதழான ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம், 1921ஆம் ஆண்டில் ஆயிரம் பிரதிகளில் ஆரம்பித்தது. இன்று ஒரு லட்சம் சர்குலேஷனை எட்டியுள்ளது.

''ஒரு லட்சம் பிரதிகள் விற்பது ஒரு சாதனை என்றால், அதில் ஐம்பத்தைந்து ஆயிரம் சந்தாதாரர்கள் மாணவ, மாணவிகள் என்பது பெருமைப்பட வேண்டிய விஷயம்'' என்றார் தமிழருவி மணியன்.

'விஜயம் ஒரு லட்சம் பிரதிகள் விற்பனையை எட்டியதையொட்டி நடத்தப்பட்ட விழாவுக்கு வந்திருந்த பார்வையாளர்களின் ஆயிரக்கணக்கான மாணவ, மாணவிகளைக் காண முடிந்தது. தொழிலதிபர் பொள்ளாச்சி மகாலிங்கம், நல்லி குப்புசாமி செட்டியார், 'ஸ்ரீ கிருஷ்ண ஸ்வீட்ஸ்' முரளி ஆகியோர் விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

''ஒரு துறவி இமயமலையில் கடும் தவம் செய்வதற்கு, சற்றும் குறைவானதில்லை ராமகிருஷ்ண விஜயம் போன்ற ஒரு பத்திரிகையை நடத்தும் முயற்சி'' என்றார் விஜயத்தின் ஆசிரியராக இருபத்துமூன்று ஆண்டு காலம் இருந்து, அதன் விற்பனையை தொண்ணூறு ஆயிரம் வரை உயர்த்திய சுவாமி கமலாத்மானந்தா. தற்போது இவர் மதுரை ராமகிருஷ்ண மடத்தின் தலைவராக இருக்கிறார்.

''எனக்கு தியானம் செய்யும் பழக்கமில்லை. என் மனசு குழப்பமாக இருக்கும்போது, என் வீட்டு நூலகத்தில் உள்ள ராமகிருஷ்ண மடத்தின் புத்தகங்களை எடுத்துப் படித்தால், உடனே ஒரு மனத் தெளிவு கிடைக்கும்'' என்றார் நல்லி குப்புசாமி.

ராமகிருஷ்ண விஜயத்தின் விற்பனையைக் கூடுதலாக்க இலவசங்கள் கொடுக்காவிட்டாலும், விழாவுக்கு வந்திருந்த அன்பர்கள் அனைவருக்கும் பகவத்கீதை கையடக்கப் பதிப்பு ஒன்றை பிரசாதமாக வழங்கினார்கள்.

**- மௌலி**




# காதல்

காதலிக்கும் ஆண்களைவிட நிராகரிக்கும் ஆண்களையே, பெண்கள் அதிகமாக விரும்புகிறார்கள். விவேகமாக நிராகரிப்பவன் ஒருநாள் காதலிக்கக் கூடும்.

- ஜான் ஹே

அவள் அழகின் பிம்பத்தில் அதிர்கிறது கண்ணாடி. அவள் வீட்டை விட்டு வெளியே வந்தால் கதிரவனின் வெயிலும், அவள் அழகின் வெயிலும் மோதிக் கொண்டு மின்னல்கள் தெறிக்கின்றன.

குளிக்கிறேன் என்கிற பெயரில் தண்ணீரை வெந்நீராய் மாற்றி ஓட வைத்து விட்டு, கூந்தலை உலர்த்துகிறேன் என்கிற பெயரில் மழைக்கால காற்றையும் கனலாக்கிக் கொண்டு இதோ ஊஞ்சலில் உட்கார்ந்திருக்கிறாள் அவள்.

அவள் வேறுயாருமல்ல; நான்தான். மகா என்கிற மகாலட்சுமி. அருகில் என் தோழி கீதா நின்றுகொண்டிருக்கிறாள். இது ஒரு கல்லூரி வளாகம். எங்கள் இருவரின் வீடும் இங்குதான் இருக்கிறது. நானும் இவளும் பக்கத்திலிருக்கும் பள்ளியில் பன்னிரண்டாம் வகுப்பு வரை ஒன்றாகப் படித்தோம். அதன் பிறகு இவள் இதே கல்லூரியில் படிக்கச் சேர்ந்தாள். நான் வேறு கல்லூரியில் சேர்ந்தேன்.

66வது ஆண்டு மலர்

# தபூ ஷங்கர்

# தீ!

## காதல் பொன்மொழி கதை – 1

இன்று இந்தக் கல்லூரியின் நூற்றாண்டு விழா. அதற்காக இங்கே படித்தவர்களையும் வேலை பார்த்தவர்களையும் குடும்பத்தோடு வருமாறு அழைத்திருந்தார்கள். கீதாவும் அதற்குத்தான் தயாராகிக் கொண்டிருக்கிறாள்.

என்னையும் அழைத்தாள். ''நான்தான் இந்தக் கல்லூரியில் படிக்கவே இல்லையே'' என்றேன். ''படிக்கலன்னா என்னடி.... இது நம்ம கல்லூரிடி'' என்று என் கையைப் பிடித்து இழுத்தாள்.

கல்லூரி மைதானத்தில் போடப்பட்டிருந்த மிகப் பெரிய பந்தலின் கீழ் கும்பல் கும்பலாகக் குடும்பத்தோடு கூடியிருந்தார்கள் பழைய மாணவர்கள். அந்த நாள் ஞாபகங்கள் அங்கே ஆறாக ஓட ஆரம்பித்திருந்தது. கீதாவும் அதில் இறங்கினாள். எனக்கு யாரையும் தெரியாததால் ஆற்றின் கரையிலேயே நின்று வேடிக்கைப் பார்க்க ஆரம்பித்தேன்.

அப்போது... அருகிலிருந்து 'டேய் மகாடா' என்கிற சலசலப்பு எழுந்தது. திரும்பிப் பார்த்தால், அங்கே நின்றிருந்த கூட்டத்தின் நடுவே ''1991-94'' என்று எழுதப்பட்டிருந்தது. அது நான் பத்தாம் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை படித்த காலம். சலசலக்கும் இந்தக் கூட்டமோ அப்போது இங்கே இளங்கலை படித்துக் கொண்டிருந்த கூட்டம்.

இந்தக் கல்லூரியில் படித்த அழகழகான பெண்களை எல்லாம் விட்டுட்டு, பள்ளியில் படித்த என்னை வட்டமிட்ட கூட்டம் இது. இதில் இருக்கும் எல்லோரும் என்னிடம் காதலைச் சொல்லி திட்டு வாங்கியிருக்கிறார்கள் - ஒரே ஒருவனைத் தவிர.

'நீ இல்லைன்னா செத்துப் போயிடுவேன்' என்று அழுத இதே ஊரைச் சேர்ந்த வெங்கட், அதோ தன் மனைவியோடு நிற்கிறான். ஆனால், நான் தனியாக நிற்கிறேன்.

என் அருகில் மெல்ல வந்த ஒருவன் ''நீங்க மகாதானே'' என்றான்.

''ஆமாம்'' என்று நான் சொல்வதற்குள், ''அதில் என்னடா சந்தேகம்'' என்றான் இன்னொருவன்.

அப்போது அங்கே வந்திறங்கிய ஒருவனைப் பார்த்ததும் மொத்த கூட்டமும் 'டேய் சிவாடா' என்று கத்தியபடி ஓடியது. அவன்தான் அந்த மூன்று வருடங்களில் என்னிடம் ஒரு வார்த்தைக்கூட பேச முயற்சிக்காதவன். அதனாலேயே என்னால் ஒருபோதும் மறந்துவிடவே முடியாதவன்.

'எப்படிடா இருக்கே?' என்ற விசாரிப்புக்கள். 'அப்படியே இருக்கியேடா!' என்கிற ஆச்சர்யங்கள். நடுவே ஒருத்தன் ''என்னடா தனியா வந்திருக்கே. மனைவி எங்கே.. குழந்தைகள் எத்தனை?'' என்று கேட்டான்.

''நான் கல்யாணமே செஞ்சுக்கலையே'' என்றான்.

''ஏண்டா?'' என்றனர் பலர்.

''செஞ்சுக்கலை. அதை விடுங்கடா... உங்களைப் பத்திச் சொல்லுங்கடா'' என்றான்.

''அதெல்லாம் அப்புறம் பேசிக்கலாம்.. முதல்ல நீ ஏன் கல்யாணம் பண்ணிக்கலைன்னு சொல்டா'' என்றனர்.

''அவன் சொல்ல மாட்டான்... நான் சொல்றேன்'' என்று ஒருவன் முன்னால் வந்தான்.

''இங்க படிக்கிறப்போ... சிவாகிட்ட ஒரு கேள்வி கேப்போமே, ஞாபகம் இருக்கா?'' என்றான்.

''எப்படி மறக்கும். மகாவை நீயும் லவ் பண்றியாடா? அதானே அந்தக் கேள்வி'' என்றான் ஒருவன்.

''ஆமாம். நாம எல்லாரும் இவன் கிட்ட... கேட்டிருக்கோம். ஏன்னா பயம். இவன் மகாவைக் கொத்திட்டுப் போயிடுவானோன்னு எல்லாருக்கும் பயம். ஆனா, இல்லனு சொன்னான். அது உண்மை இல்லடா. இவன் மகாவை லவ் பண்ணியிருக்கான்டா. இருந்தும் அதை மகாகிட்ட கடைசிவரைக்கும் சொல்லாம போனதுக்குக் காரணமே மகா இவனையும் பதினொன்னா நெனைச்சிட்டா, அதனாலதான்.

''அப்படின்னா... மகாவை நெனைச்சிட்டுதான் இவன் இன்னும் கல்யாணம் பண்ணிக்காம இருக்கானா?''

''அடப்போடா... இவன் வீட்டை நீங்கெல்லாம் போய்ப் பார்த்திருக்கணும். இங்க இருந்து இவன் போனதிலிருந்து... சீக்கிரம் பெரிய ஆளாகி... மகாவைப் பெண் கேக்கணும்னு ராத்திரி பகலா உழைச்சிருக்கான்டா... சம்பாதிச்ச ஓர் இடத்தை வாங்கி, இதே போல ரவுண்டானா கட்டி, மகா விளையாடுற வாலிபால் கிரவுண்டு, பரத நாட்டியம் ஆடுற ஆடிட்டோரியம் எல்லாம் கட்டி, நடுவுல அப்படியே மகாவோட வீடு மாதிரியே ஒரு வீடு கட்டி அதுல வாழ்ந்துட்டு இருக்கான்டா. இடையில ஒரு தடவை இல்ல, ஏழெட்டு தடவை மகாவைப் பெண் கேக்கலாம்னு இங்க கௌம்பியும் வந்திருக்கான். ஆனால், மகா, ''யார் நீங்கன்னு'' கேட்டுட்டா என்ன பண்றதுன்னு... காலேஜ் வாசல் வரைக்கும் வந்து திரும்பிப் போயி, இத்தனை வருஷமா மகாவோட நெனைப்புலயே வாழ்ந்திட்டிருக்கான்டா'' என்று சொன்னான். மூச் சற்றுக் கேட்டுக் கொண்டிருந்தேன் நான்.



**''என்னடா ஒரே ஒரு மார்க்தான் வாங்கி இருக்கே?''**

**''சிங்கம் சிங்கிளாதான் வாங்கும் அப்பா!''**

கே.ராமச்சந்திரன், சென்னை-87

இதுதானா...? இத்தனை வருடமாய் எனக்குக் கல்யாணம் ஆகாமல் இருப்பதற்கு ஏதோ ஓர் உன்னதமான காரணம் இருக்கிறது என்று உள்மனம் நினைத்துக் கொண்டிருந்ததே இதுதானா. இப்படியும் ஒருவன் காதலிப்பானா. அதற்கு மேல் என்னால் நிற்க முடியவில்லை. ஓடிப்போய் சிவா எதிரில் நின்று, ''யார் நீங்க?''ன்னு உங்களைப் பார்த்து நான் கேட்டிருந்தா காதல் என்னைச் சுட்டெரித்திருக்காதா சிவா?'' என்றேன் கண்கள் கலங்க.

''மகா'' என்றான் கண்கள் விரிய.

''ஆமாம்... இவன் மட்டும் ஏன் நம்மகிட்ட பேசவே மாட்டேங்கிறான்னு எப்ப நான் நினைக்க ஆரம்பிச்சேனோ அப்பவே நானும் உங்களைக் காதலிக்க ஆரம்பிச்சிட்டேன் சிவா. எனக்கு இத்தனை வருஷமா கல்யாணம் ஆகாம இருக்கிறதுக்குக் காரணமே, நீங்க எம்மேல வைச்சிருக்கிற காதல்தான்னு தெரிஞ்சிருந்தா, இத்தனை வருஷத்தையும் நான் எவ்வளவு ஆனந்தமா அனுபவிச்சிருப்பேன் தெரியுமா?''

''அப்படின்னா... இன்னும் உங்களுக்குக் கல்யாணம் ஆகலையா'' என்றான்.

''எப்படி ஆகும். உங்கக் காதல்தான் என்னைச் சுத்தி தீ மாதிரி காவல் காத்திருக்கே. எனக்கிந்த அழகெல்லாம் வேணாம் சிவா. எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு... உங்க நெஞ்சுக்குள்ள இருக்கிற அந்தக் காதல மட்டும் எங்கிட்ட கொடுத்துடுங்க சிவா'' என்று அழுதேன்- அழுகையிலும் காதல் நிறைவு பெறும் என்பது புரிந்தது. ●



## பித்ரு தோஷ நிவர்த்தி - பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில்

# ஆடி அமாவாஸை திதியில்

## 12.8.2007

## அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அமாவாஸையில் சூரியனும் சந்திரனும் ஒரே நேர்க்கோட்டில் சஞ்சரிப்பதால் அன்றைய தினம் மனிதர்களது புத்தி சஞ்சலம் இல்லாமல் தெளிவாகச் செயல்படுகிறது. நாம் எதை நினைத்து அமாவாஸை தினத்தில், இராமேஸ்வரத்தில் தான தர்மங்கள் செய்கிறோமோ, அந்த எண்ணங்கள் பல மடங்கு உறுதியோடு வெற்றிபெறும். ஆடி அமாவாஸை அன்னதானம் மேலும் சிறப்பான பலன்களை அளிக்கும் என்பதில் ஐயமில்லை.

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் ஆடி அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் என்றென்றும் அழியாத பலனைக் கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலனும் ஒருசேர கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் ஆடி அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். இராமேஸ்வரத்தில் ஆடி அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

**★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் `நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.**

★ சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் 6 மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் 1 வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு, நித்ய பூஜைக்கு உதவிடும் தினசரி வழிபாட்டு ஸ்தோத்திரங்கள் புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1001, ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட வெள்ளி டாலர், ஸ்வாமி படம் ஆடி அமாவாஸைக்குப் பின்னர் பிரஸாதத்துடன் அனுப்பி வைக்கப்படும்.

ஆடி அமாவாஸை திதியில் நம் முன்னோர்கள் நினைவாக வேஷ்டி, புடவை என வஸ்த்ர தானம் செய்து, அன்னதானம் செய்வது ஈடு இணையற்ற பலனைக் கொடுக்கும். அன்னதானம் வகைக்கு ரூ.501 உடன் வஸ்த்ர தானத்திற்கு ரூ.250 சேர்த்து ஆக ரூ.751 அனுப்பி தங்களை இப்புனிதப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ளலாம்.

**நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனிதமான அன்னதான ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை நாடுகிறோம்.**

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


# கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

M-11/F-4, RAGAM APTS., I AVENUE ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
☎: (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300, 94451 27500


ஆடி அமாவாஸைக்கு நேரில் வர விரும்புபவர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது. ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# ஜாதி குப்பிக்குள் என்னை அடைக்காதீர்கள்!

## சரத்குமார் சரவெடி!

''நந்திகிராமத்தில் நடந்ததைப் போன்ற கொடுமை விரைவில்-தமிழகத்திலும் நடக்கவிருக்கிறது'' திரைப்பட நடிகரும் முன்னாள் எம்.பி.யுமான திரு.சரத்குமார் அண்மையில் அதிகாலை நேரத்தில் ஆவேசமாகப் பேசிய பேச்சு இது!

முதல் நாளே சரத்குமார் நம்மிடம், ''நாளைக் காலை ஐந்தரை மணிக்கு வந்து விடுங்கள்'' என்று சொல்லியிருந்தார். நாமும் அவர் சொன்னபடி மறு நாள் காலை ஐந்தரை மணிக்கே கொட்டிவாக்கத்தில் உள்ள அவர் வீட்டின் கேட்டைத் தட்டினோம். உள்ளே நுழைந்தால், தோளில் மாட்டிய தோல் பையுடன் ஜிம்முக்குக் கிளம்பத் தயாராக கார் அருகில் நின்று கொண்டிருந்தார். அவரே டிரைவர் சீட்டில் ஏறிக் கொள்ள, வண்டி நேராக திருவான்மியூரில் உள்ள அஸெண்டாஸ் தகவல் தொழில் நுட்ப வளாகத்தை நோக்கி விரைந்தது.

அரசியல் கட்சியை அக்டோபரில் ஆரம்பிக்க இருக்கும் சரத்குமார், அரசியல் மற்றும் மக்கள்

பிரச்னைகளைப் பற்றிப் பேசத் துவங்கினார். அதில் முத்தாய்ப்பாக, ''சாத்தான் குளம் அருகில் டாடா நிறுவனம், டைடானியம் தாதுப் பொருட்கள் எடுப்பதற்குப் பெரிய தொழிற்வளாகம் துவங்க இருக்கிறது. இதற்காக முப்பது கிராமங்களில் நிலம் எடுக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு மிகக் குறைந்த விலையில் நிலத்தைக் கையகப்படுத்திக் கொடுக்க அரசு முயல்கிறது. வேண்டிய நிலத்தை நேரிடையாக விவசாயிகளிடம் பேசி, நியாயமான விலை கொடுத்து டாடா நிறுவனம் வாங்கிக் கொள்ள வேண்டியது தானே! மேலும், தங்களது வாழ்வாதாரமாக இருக்கும் நிலத்தை விற்றுவிட்டு அந்த மக்கள் என்ன செய்வார்கள்? நந்திகிராமத்தில் நடந்தது போன்றே தமிழகத்திலும் நடக்க இருக்கிறது'' என்கிறார் ஆவேசமாக.

அதற்குள் வண்டி அலெண்டாஸ் வளாகத்தில் நுழைகிறது. சரத் தினமும் உடற்பயிற்சி செய்யும் ஃபிட்னஸ் ஒன் என்ற ஜிம் அங்கே தான் இருக்கிறது. முதலில் டிரெட் மில்லில் இருபது நிமிடம் நடை. அதற்குப் பிறகு எடைதூக்கும் பயிற்சி. அரங்கத்துக்குள் சென்று பல விதமான பயிற்சிகளைச் செய்து தன் கட்டுமஸ்தான கைகளுக்கு மேலும் வலு சேர்க்கிறார். கடைசியில் மறுபடியும் டிரெட்மில்லில் நடை. இந்தப் பயிற்சிகளை முடிக்கவே ஒன்றரை மணி நேரம் ஆகிவிடுகிறது. பள்ளி, கல்லூரிகளில் (பி.எஸ்ஸி கணிதம்) படிக்கும்போது விளையாட்டு வீரராக, பல பரிசுகளை வென்றிருக்கிறார். ''ஒன்பதாவது படிக்கும்போது துவங்கிய உடற்பயிற்சிப் பழக்கம் இன்றும் தொடர்கிறது''என்கிறார்.

நாம் தமிழகத்தில் ஒரு தலைமுறைக்கே இந்தி தெரியாமல் செய்து விட்டோம்.

சரத்குமாரின் அப்பா ராமநாதன் அகில இந்திய தகவல் தொடர்பு பணியில் அதிகாரியாக இருந்தவர். டெல்லியில் பணியில் இருந்தபோது சரத்குமார் பிறந்தார். ஐந்தாவது வரை டெல்லியில் தான் படிப்பு. எனவே இந்தி, எழுத பேச, படிக்க நன்றாக வரும். ''இந்தி மொழி தெரிந்த காரணத்தால், ராஜ்யசபை உறுப்பினராக இருந்தபோது எல்லோரிடமும் சகஜமாகப் பழக





முடிந்தது. நாம் தமிழகத்தில் ஒரு தலை முறைக்கே இந்தி தெரியாமல் செய்து விட்டோம். ஆங்கிலமும் படிக்காதிருந்தால் இப்போது கணினித் துறையில் ஆயிரக்கணக்கான வேலை வாய்ப்புகளை இழந்திருப்போம்'' என்கிறார்.

## நான் உள்துறை அமைச்சர். என் அப்பா கல்வி அமைச்சர்!

**வீ**ட்டுக்குத் திரும்பிய சரத்குமார் நேராக அலுவலக அறைக்குள் சென்று கம்ப்யூட்டர் முன்பு அமர்ந்தார். கட்சி துவங்க இருப்பதால் ஏகப்பட்ட மின்னஞ்சல்கள் வருகின்றனவாம்.

''எனக்கு வரும் பெரும்பாலான ஐடியாக்கள் மெயில்கள் மூலம் அமெரிக்காவிலிருந்துதான் வருகின்றன. ஏற்கெனவே, ஆட்சியிலிருந்த கட்சிகளைப் பார்த்து மக்கள் சலிப்படைந்து விட்டார்கள். நேர்மையான அரசியல்வாதிகளை மக்கள் எதிர்பார்க்கிறார்கள்.''



மெயில் அனுப்பும் ஒவ்வொருவருக்கும் தவறாமல் தாமே பதில்களும் அனுப்புகிறார். ''கட்சிக்குப் பெயர் வைத்து விட்டீர்களா?'' என்றோம். என் கட்சியின் பெயரில் மட்டுமல்லாமல், அதன் நடைமுறையிலும் செயல்பாடுகளிலும் கட்டாயம் 'சமத்துவம்' இருக்கும். சரத் கடுப்படைவது, பத்திரிகையாளர்கள் ''உங்கள் கட்சி நாடார்கள் கட்சியாமே...?'' என்று கேள்வி கேட்கும்போதுதான். நான் பிறந்து வளர்ந்த சூழல் அனைத்தும் ஒரு பரந்த,பேதங்களில்லாத சமூக அமைப்பை உள் வாங்கிக் கொள்ளும் பக்குவப்பட்ட நிலையில்தான் அமைந்தது. ''என்னை ஏன் ஒரு ஜாதிக் குப்பிக்குள் அடைக்கப் பார்க்கிறார்கள்'' என்று கேட்கிறார். ஒன்பது மணிக்குப் படப்பிடிப்புக்குப் போக வேண்டும் என்ற நிலையில் தினசரிகளை வேக வேகமாக ஒரு புரட்டு புரட்டிவிட்டு, ''ஐந்து நிமிடத்தில் குளித்துவிட்டு வருகிறேன்'' என்று வீட்டினுள் போகிறார். போகும்போதே ''வளமையான நாட்டை உருவாக்க நினைத்த கலாமுக்கு மறுபடியும் வாய்ப்பு கொடுக்கவில்லையே'' என்று வருத்தம் கொப்பளிக்கச் சொல்கிறார்.

சரியாக எட்டரை மணிக்கு ஜீன்ஸ் பேண்ட், வெள்ளை சட்டை, நெற்றியில் குங்குமக் கீற்றுடன் வருகிறார்.

இப்போது நடித்துக் கொண்டிருக்கும் 'நம்நாடு' படத்தின் கதையைப் பற்றிக் குறிப்பிடுகிறார் சரத். ''என் அப்பா கல்வி அமைச்சர்; நான் உள்துறை அமைச்சர். சட்டம் ஒழுங்கைக் காப்பாற்ற நான் எடுக்கும் நடவடிக்கைகள் அரசியல் ரீதியாக அப்பாவுக்குச் சில பிரச்னைகளைக் கொண்டு வருகின்றன. அப்பா - மகன் மோதல் என்று கதை தொடர்கிறது'' என்று சொல்லிச் சிரிக்கிறார்.

கட்சியும், 'நம்நாடும்' ஒரே கால கட்டத்தில் ரிலீஸ் ஆகி தமிழ கத்தைக் கலக்க இருக்கின்றன.

- ஸ்ரீநி

படங்கள் : ராஜன்

❐ **எஸ்.கண்ணப்பன், சேரன்மகாதேவி**

*? குடியரசுத் தலைவர் மீது கண்டனத் தீர்மானம் இயற்ற வாய்ப்பில்லையா?*

! நீங்கள் குறிப்பிடும் முறை இல்லாவிட்டாலும், நீதிமன்ற முறையீடு மூலம் நடவடிக்கை எடுக்க வாய்ப்பு உண்டு. அப்படியெல்லாம் நடப்பது நாட்டுக்கே அவமானம் என்பதால்தான், அந்தப் பொறுப்புக்கான வேட்பாளர் தேர்வே அதி ஜாக்கிரதையாக நடைபெற வேண்டும். சந்தேகத்தின் நிழல்கூட படாதவர்தான் வேட்பாளராக்கப்பட வேண்டும்.

● **ஆர்.ராஜதுரை, சீர்காழி**

*? வாரம் மூன்று முட்டைகள் வழங்கும் திட்டத்தை முதலமைச்சர் தொடங்கி வைத்தபோது, மு.க. அழகிரியும் கலந்து கொண்டிருக்கிறாரே?*

! இதைவிட முக்கியமான கூட்டங்களிலெல்லாம் கலந்து கொள்ளப் போகிறார் என்பதற்கு அச்சாரம். அவருக்கு மு.க. முட்டை போட மாட்டார். மனம் வராது; அரசியல் நிர்ப்பந்தங்கள் வேறு!

● **ரா.ஜெசிந்தா, அறந்தாங்கி**

*? அமெரிக்காவில் செனட் சபை தொடக்கக் கூட்டத்தில் கங்கை நீரைத் தெளித்து, காயத்ரி மந்திரம் ஓதினார்களாமே - ஆச்சர்யமாயில்லை?*

! இல்லை. அவங்க டாலர் நோட்டைப் பார்த்திருக்கீங்களா? 'In God We Trust' என்று எழுதியிருக்கும். நாம்தான் 'மதச்சார்பின்மை என்பது மதத்தையே புறக்கணிப்பது' என தப்பாகப் புரிந்து கொண்டிருக்கிறோம்.

● **கே.ஏ.காளிமுத்து, ராணிப்பேட்டை**

*? 2011-ல் பா.ம.க. ஆட்சி அமைக்கும் என ராமதாஸும், காமராஜ் ஆட்சி அமைப்போம் என சரத்குமாரும் கூறியிருப்பதைப் பற்றி...?*

! பொறுங்க, பொறுங்க... 2011-ல் சிதம்பரம் ஆட்சி அமைக்கப் போகிறதா காங்கிரஸ் சொல்லிக்கிட்டிருக்கு. அப்புறம் மு.க. - ஜெ - விஜயகாந்த் மும்முனைப் போட்டி வேற...! ஆளாளுக்கு சீரியல் எடுத்து ஷோ காட்டறாங்க, ஜாலிதான்!

● **ஆர்.பிரகாஷ், பொன்மலை**

*? பீடிக் கட்டுகளின் மேல் மண்டையோடு முத்திரை தேவையில்லை என்று மத்திய அரசு முடிவு செய்திருப்பது சரியா...?*

! சரியில்லை. படிப்பறிவு அதிகம் இல்லாத

## கமல், ஜார்ஜ் புஷ் வேடத்தில் வருகிறாராமே!



* மிரட்டும் வில்லன்!

நீங்கள் கேட்டவை



* சிம்பிள் குட்பை!

நாட்டில் சின்னத்தின் மூலம்தான் மக்களுக்கு ஆபத்தை உணர்த்த முடியும். பீடி - சிகரெட் உற்பத்தியாளர்களின் நிர்ப்பந்தத்துக்கு மத்திய அரசு பணியும்போது, புற்றுநோய் அரக்கனுக்கும் பணிந்து விடுகிறது. மக்களுக்குத் துரோகம் இழைக்கிறது.

● ரேவதிப்ரியன், ஈரோடு

*? ''எங்கள் எம்.பி., எம்.எல்.ஏ.க்கள் குடியரசுத் தலைவர் தேர்தலில் வோட்டுப் போட்டது, எனக்குத் தெரியாமல் நடந்துவிட்டது'' என்று ஜெயலலிதா சொல்கிறாரே?*

! மூன்றாவது அணியின் இதர தலைவர்கள் காதில் முழும் முழுமாகச் சுற்றப்படும் பூ! இதோடு நில்லாமல், ''தேர்தல் கமிஷன்தான் குழப்ப அறிக்கை விட்டுக் குழப்பிவிட்டது'' என்று சொல்லும்போது 'ஜெ' தம் காதில் தாமே பூ சுற்றிக் கொள்கிறார்!

● ஏ.சுகுமார், காட்பாடி

*? பதினேழு ஆண்டுக் காலத்தில் காவிரிப் பிரச்னையில், தமிழக அரசு வழக்குரைஞர்களுக்கு மட்டுமே 23 கோடி ரூபாய் செலவழித்துள்ளதைப் பற்றி?*

! தேச நலனைப் புறக்கணித்துவிட்டு, ''அரசியல்வாதிகள் மாறுபட்டால் வழக்குரைஞர்களுக்குக் கொண்டாட்டம்'' என்பது புதுமொழி.

● சு.வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

*? ''தவறு செய்யும் போலீஸாரை சஸ்பெண்ட் செய்வது, பணிமாற்றம் செய்வது எல்லாம் முறையான நடவடிக்கையாக இருக்காது; இனிமேல் டிஸ்மிஸ்தான்!'' என்று மாயாவதி அதிரடியாகப் பேசியிருக்கிறாரே?*

! வெறும் மிரட்டலானால் சரி; உத்தரவு எனில், சட்டபூர்வமாக அது செல்லுபடியாகாது. சர்வாதிகாரியைப் போல செயல் பட முடியாது. தாம் விழிப்புடன் இருப்பதாக மாயாவதி உணர்த்தி வந்தாலே போதும். மரியாதை பெற நேர்மைதான் உதவும்.

★ வசீகரன், சென்னை - 18

*? ஜப்பானில் மிகப் பெரிய நிலநடுக்கம் ஏற்பட்டதால் அணு மின் நிலையம் ஒன்று சேதமடைந்துள்ளதே- அதனால் பேராபத்து விளையும் என்கிற அச்சம் தோன்றியிருக்கிறதே...?*



* ' வெற்றான' விளக்கம்!

! ஆமாம்! ஆமாம்! அணு மின் நிலைய ஆபத்து விளைவது இது முதல்முறை அல்ல. இதனைப் பாடமாகக் கருதியாவது இனி புதிய அணு மின் நிலையங்கள் அமைக்காமல் இருக்கவும் பழையனவற்றைப் படிப்படியாக மூடவும் முடிவெடுக்க வேண்டும்.

● த.பரதன், திருவாரூர்

*? முஷாரஃப்புக்கு எதிரான நடவடிக்கை முற்றிலுமாக ஒடுக்கப்பட்டுவிட்டதாகக் கருதலாமா?*



* 'சத்தான' பங்கேற்பு!

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
**எஸ்.கண்ணப்பன், சேரன்மாதேவி**

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
**வசீகரன், சென்னை - 18**

! எங்கே...? அவர் பதவி நீக்கம் செய்த தலைமை நீதிபதி சௌத்ரியை பாக். உச்ச நீதிமன்றம் மீண்டும் பதவியில் அமர்த்திவிட்டதே! இனி முஷாரஃப் தான் ஒடுங்க வேண்டும்.

● **என்.உஷாதேவி, மதுரை**

**? 'குழந்தை இல்லாத ஜெயலலிதாவுக்குச் சொத்து எதற்கு?' என்று மு.க. ஸ்டாலின் கேட்டுள்ளாரே...?**

! டேஞ்சரஸ் லூஸ் டாக்! ஒரு பெண்ணைப் பார்த்து இப்படிப் பேசுவது ஆணாதிக்க அநாகரிகத்தின் உச்சம்! நிற்க. புள்ளை - குட்டி உள்ளவங்க எல்லாம் பொதுவாழ்வில் எப்படி வேணா முறைகேடா சொத்து சேர்க்கலாம்னு சொல்ல வர்றாரா?

● **லெ.நா.சிவகுமார், சென்னை - 33**

**? 'தசாவதாரம்' படத்தில் கமல் ஜார்ஜ் புஷ் வேடத்தில் வருகிறாராமே?**

! வில்லன் பாத்திரத்தில் தூள் கிளப்பக் கூடியவர் தானே கமல்!

● **என்.சண்முகம், சேலம் - 1**

**? வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் வாரிச் சுருட்டிக்கொள்ளும் இந்தக் காலத்தில் இரண்டே சூட்கேஸ்களுடன் ராஷ்டிரபதி பவனிலிருந்து வெளியேறும் கலாமைப் பற்றி...?**

! கவர்னர் ஜெனரல் பதவிக் காலம் முடிந்த பிறகு, அதே மாளிகையிலிருந்து வெளியேறிய ராஜாஜியை நினைவூட்டுகிறார்.

● **கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை - 42**

**? 75 வயதான விதவைப் பாட்டியை யார் காப்பாற்றுவது என்கிற தகராறில், பெண்களும் பேரப் பிள்ளைகளும் ஈடுபட்டு, அந்தக் கிழவியைக் குப்பைமேட்டில் தூக்கி எறிந்துவிட்டார்களே... தமிழ்நாட்டில் மனித நேயம் மடிந்துவிட்டதா?**

! தமிழ்நாட்டில் இந்தக் கொடுமை என்றால் ஒரிஸ்ஸாவில் நயாகர் என்ற ஊரில், பெண் சிசுக் கொலையில் ஸ்பெஷலைஸ் செய்யும் மருத்துவ மனைகள், அந்த உடல்களைப் பாழுங் கிணற்றில் வீசும் பயங்கரம் வெளிச்சத்துக்கு வந்துள்ளது. மனிதாபிமானம் இந்தியா முழுவதும் மடிந்து வருகிறது.

● **பி.ராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு**

**? சிவாஜி படத்துக்குக் கூட்டம் இன்றுவரை குறையவில்லை. ஆனால் படத்தில் டயலாக்கோ 'பன்னிங்கதான் கூட்டமா வரும்' என்று அமைந்திருக்கிறதே?**

! கூட்டமாக வாழ்ந்து, கூட்டமாக நகர்ந்து கூட்டமாக வருவதற்கும், தனித் தனியே கிளம்பிக் கூட்டமாகச் சேர்வதற்கும் நிறைய வித்தியாசம் இருக்குங்க. ◯

★ கெத்தான' சீரியல்!



★ டேஞ்சரஸ் கேள்வி!



★ ஒடுக்கும் நீதி!



✱ என்.சண்முகம், திருவண்ணாமலை

? உங்களுக்குப் பிடித்த விளையாட்டு...?

தமிழ்த் தாத்தா உ.வே.சாவின் தமிழ்த் தாய் வயிற்றுப் பேரன் 'வாகீச கலாநிதி கி.வா.ஜ' அவர்களின் வார்த்தை விளையாட்டு. கலைமகள் ஆசிரியராக அவர் இருந்தபோது, அவரைக் காண 'ஸூர்கி நகரிலிருந்து 'நாதன்' என்ற வாசகன் வந்திருந்தார். அவரைப் பார்த்தவுடனேயே பனிச்சென்று "நான் இந்த ஊர் கி.வா.ஜகன் வாதன்' நீங்க "ஸூர்கி வாச(ஜ)கர் நாதன்" என்றாராம். கலைமகள் ஆசிரியருக்குத் தமிழும், நகைச்சுவையும் அமுதசுரபியாகக் கொட்டும்... Pun எனப்படும் வார்த்தை விளையாட்டில் இவர் விற்பன்னர், நான் அறிந்து தமிழில் Master of Pun and Fun 'வாகீச' - கலாநிதி கி.வா.ஜ அவர்கள்தான். இவருக்குக் கிடைத்த பட்டத்திலேயே வார்த்தை விளையாட்டு இருக்கிறது. 'வாகீச'வைச் சற்று மாற்றிப் போட்டால் 'கிவாச(ஜ)' வருகிறது. இவருடைய 'கவி பாடலாம்' நூலைப் படிக்கும் கத்துக்குட்டி வீட்டுக் கட்டுத்தறியும் கம்பனாகும்.

✱ ரகுநாதன், திருநெல்வேலி

ஆசாரமாக இருந்தால் வியாதி வெக்கைகள் வராதாமே...?

எனக்கு ஒரு நெருங்கிய உறவினர் இருக்கிறார். ஆசாரம் காரணமாக எப்போதும் சற்றுத் தூரத்தில் தள்ளியே நிற்பார். அதனால் தூரத்து உறவினர் ஆகிவிட்டார். இவ்வளவு ஏன் - எச்சில் கூடாது என்பதற்காக மனைவிக்கு ஆசையாக முத்தம்கூட கொடுக்க மாட்டார். அப்படியே கொடுத்தாலும் அது 'ஃப்ளையிங்-கிஸ்' ஸாகத்தான் இருக்கும். 'மெட்ராஸ்-ஐ, 'சிக்குன்-குன்யா' போன்ற இம்சைகள் ஊருக்குள் நுழைந்ததும் லாட்ஜில் ரூம் போடுவதுபோல முதல் காரியமாக இவரிடம் தான் குடிபுகும். இப்போதிருக்கும் 'பொல்யூஷனை' சமாளிக்க ஒரே 'சொல்யூஷன்...' ஊழலோடு ஒன்றுபட்டு வாழ்.

✱ அ.முரளீதரன், மதுரை

தாயை வர்ணிக்கும் பாடல்களில் தங்களைக் கவர்ந்தது எது...? ஏன்...?

ரவீந்திரநாத் டாகூரின் 'ஜனகணமன' தேசிய கீதம்... பங்கிம் சந்திர சட்டர்ஜியின் 'வந்தே மாதரம்' ஏன் கவர்ந்தது என் பதைத்



தெரிந்துகொள்ள, என்னைப் போன்று பெங்காலி தெரியாதவர்கள் பாரதியாரின் கைவண்ண மொழி பெயர்ப்பு ரங்கோலி (நவிர்மணி நீரும் நயம்படு கனிகளும்...) கவிதைக் கோலத்தைப் படித்துப் பாருங்கள்.

**✶ ராமலக்ஷ்மண், கோவை**

**மனிதர்களுக்கு உயர்வைத் தருவது குலமா? குணமா...?**

'குலத்தளவே ஆகுமாம் குணம்' என்பார்கள். எனக்கென்னமோ குணத்தளவே ஆகுமாம் குலம்'' என்பதுதான் சரியெனப் படுகிறது. பக்கத் துணைக்குக் கர்ணன் படத்தில் வரும் 'கண்ணுக்குக் குலமேது' பாடலில் உள்ள பாலினில் இருந்தே நெய் பிறக்கும்; பரம்பொருள் கண்டே மெய் சிறக்கும் கவிஞர் கண்ணதாசனின் வரிகளைக் கொள்கிறேன்.

**✶ மாலினி, பெங்களூர்**

**மரபுக் கவிதையில் ஒரு புதுக் கவிதை சொல்லுங்களேன்...?**

வெண்பாவுக்கு அழகு இலக்கணம். அழகுக்கு இலக்கணம் பெண். பெண்ணுக்கு அழகு மரபு. இதோ என்னால் முடிந்த புதுக்கவிதை 'பெண்பா'

'கடிதார், ஜீன்ஸ்பனியன், காலில் சொகுசாய்,
அடிடாஸ் புதுக்கவிதை ஆனாள் - மடிசார்
யுகத்துக்காய் மாறினாலும் யூனிவர்சல் ப்யூட்டி
அகத்தின் அழகே மரபு...'

**✶ என்.கோமதி, நெல்லை**

**மோகன் தம்பி... உனக்கு ஒருநாள் கிச்சன் கிங் பதவி கிடைத்தால்...?**

அதை ஏன் கேக்கறீங்க கோமதி அக்கா... சமீபத்தில் தனது மருமகளைப் பார்க்க எனது கிச்சன் க்வின் பெங்களூருக்குச் சென்றபோது, அடியேனுக்கு 'கிச்சன் கிங்' ப்ரமோஷன் கிடைத்தது. பாவம்... என் ப்ரமோஷனால் 'மோசம் அண்ட் மோஷன்' போனது என்னை நம்பி சாப்பிட்ட என் அப்பா, என் பசங்க... என் வசதிக்காக உளுத்தம் பருப்பை உ.ப., பயத்தம் பருப்பை ப.ப. என்று லேபில் ஒட்டி டப்பாக்களில் என் மனைவி வைத்து விட்டுப் போயிருக்கிறாள்... உப்பு டப்பா லேபிளில் 'ப்' அழிந்ததை அறியாத நான், உளுத்தம் பருப்பு என்று நினைத்து உப்பை அள்ளிப் போட்டு சத்தியாக்கிரக லெவலில் சாம்பார் வைத்தேன். அதிக அளவு உப்பால் சாம்பாரில் சமுத்திரம் போல அலை அடித்தபோது, எனக்கு லேசாகச் சந்தேகம் வந்தது. சந்தேகத்தில் சாம்பாரில் நான் மேலும் உப்பை அள்ளிப் போட... சாப்பிட்ட என் அப்பாவும், பசங்களும் உப்பிட்ட என்னைக் கரித்துக் கொட்டினார்கள். அன்றிலிருந்து என் பிள்ளைகள் என்னை 'அப்பா' என்பதற்குப் பதில் 'உப்பா' என்றுதான் அழைக்கிறார்கள். ◎



சிரி சிந்தி செயல்படு!

# பாடம் பயன்படும்!

கருத்து:யுவா படம்:பிள்ளை









Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.